உ

சிவமயம்.

ஔவையார் திருவாய்மலர்ந்தருளிய

# ஔவைக்குறள்

## மூலமும், ஞானதீபார்த்த உரையும்

இது,

பன்னூலாசிரியர், கோரக்கோட்டை

ம-ா-ா-ஸ்ரீ,

ப. வடிவேலு செட்டியார் அவர்களால்

ஞானதீபார்த்த உரை யெழுதப்பட்டு,

பூவிருந்தவல்லி,

பி. எஸ். டி. எம். அண்டு சன்

தமது

சென்னை, சுந்தரவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

1930

# ரிஜிஸ்தர் அறிவிப்பு.



இதன் விலை அணா 8.

எமது விலாசம்:—

பூ. து. மாசிலாமணி முதலியார்,
சுந்தரவிலாசம் பிரஸ்.
நெ. 25, வல்லம் பங்காருசெட்டி வீதி,
வேப்பேரி, மதராஸ்.

---

# கைமுறை பாக்கெட் வைத்தியம்.

சுமார் 30 வருஷகாலமாக கைமுறையாக சுருதி, யுக்தி, அனுபவத்துடன் கைபாகம் செய்பாகம் தீட்சை பாகம் தவறாமல் செய்து முடித்து பலருக்கும் கொடுத்து பூரணசௌக்கியம் உண்டாகி எங்கும் பிரபலமான அநேக முறைகளை உலகபரோபகாரமாக இதில் எழுதியிருக்கிறது ஒவ்வொருவரும் எவ்வித நோய்கள் வந்தபோதிலும் ஆபத்து காலத்தில் வைத்தியரை தேடாமலே இதிலுள்ள ஔஷத முறைகளை நம்பிக்கையாகச் செய்து சௌக்கியத்தையும் ஆச்சரியத்தையும் அடையலாம். இது ஒவ்வொரு குடும்பங்களிலும் அவசியமாக கையிருப்பில் இருக்கவேண்டியதாகும். எப்போதும் ஜேபியில் மடியில் இருப்பதற்காக சிறிய பாக்கெட் சைசில் அழகிய பயிண்டுடன் தயாரிக்கப்பட்டிருக்கிறது. போலி புத்தகங்களை வாங்கி யேமாறாமல், கைமுறையென்றும், சுந்தரவிலாசம் அச்சுக்கூடத்தில் பதிப்பித்ததென்றும் கவனித்து வாங்குங்கள்.

புத்தகம் 1-க்கு விலை ரூபா **1**.

# அனுபோக ஜாதக ரகசியம்.

## கிரகசார சக்கரத்துடன் (முதற்பாகம்)

இந்த அனுபோக ஜாதக ரகசியமென்னும் கைகண்ட சாஸ்திரமானது நேர்வழியிலகப்பட்ட நவநிதியம்போல் கிடைத்து அச்சிட்டரங்கேற்றி யாவரும் கையாண்டு வருமாறு வெளிவந்திருக்கின்றமையால் இந்நூலைக் கண்ணுற்ற நண்பர்களியாவரும் சோதிடரை விரும்பாமல் ஜாதகம், குறிப்பு, லக்கினம், கோசாரபலன்முதலிய எல்லாநன்மை தின்மைகளையும் தாங்களே அறிந்துக்கொள்ளலாம். அன்றியும் ஸ்திரீகள் ஜாதகமும் அடங்கியிருக்கிறது.

புத்தகம் 1-க்கு விலை ரூபா **1**.

எமது விலாசம்:—

**பி. எஸ். டி. எம். அண்டு சன்,**

**வேப்பேரி போஸ்டு மதராஸ்.**

உ

சிவமயம்.

ஔவையார்

திருவாய்மலர்ந்தருளிய

# ஔவைக்குறள்

## மூலமும் ஞானதீபார்த்த உரையும்.

### வீட்டுநெறிப்பால்.

### 1. பிறப்பின்நிலைமை.

**1. ஆதியாய் நின்ற வறிவு முதலெழுத்**
**தோதிய நூலின் பயன்.**

உரை—நமது சரீரத்திற்கு முதன்மையாய் நின்ற அறிவானது முதலெழுத்தாகிய பிரணவத்தை சொல்லிய வேதத்தின் பிரயோசனமாகும் இங்கு எனக்கு இதைச் சொல்ல இடங்கொடுத்தது.

கருத்து—பிரணவத்தை சொல்லிய இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களின் பயனை ஆதியாகிய என் அறிவால் சொல்லுகிறேன்.

விசேஷம்—ஆன்மா தனது வினையினளவுக்குத்தக வேறோர் சரீரமெடுப்பதற்குக் காரணமா யிருப்பதால் ஆதியாய் நின்ற அறிவு, எனவும், வேதங்களுக்கு ஆதியில் உச்சரிப்பது பிரணவமாகியதால் ‘முதலெழுத்’ தெனவும்

அந்த வேதத்தையே சொல்லுவது இந்நூலென்பதால் 'ஓதிய நூலின் பயன்' எனவுங் கூறினர்.

அறிவே ஆன்மா, ஆன்மாவே அறிவாகும்.

எல்லா எழுத்திற்கும் அகரம் என்ற எழுத்து முதலாக உடையதுபோல, உலகிற்கு முதன்மையாய் இருக்கப்பட்டவர் கடவுள் என்று தெய்வப்புலவவள்ளுவர் திருவாய்மலர்ந்தருளிய பொய்யாமொழி திருக்குறளிற்குமுதற் பாவாகவும், கடவுள் வாழ்த்தாகவும், மங்கலச்செய்யுளாகவும் கூறியதுபோன்று, ஔவை அம்மையாரும் பிருதிவு, அப்பு, தேயு, வாயு ஆகாயம் எனும் பஞ்சபூத சரீரத்திற்கு ஆதிகாரணம் அறிவென்றும், வேதங்களுக்கு ஆதியாய் உச்சரிக்கப்பட்டது பிரணவமென்னும், முதலெழுத்தென்றுங் கூறினர்.

ஔவை வள்ளுவர் முதலாய எழுவருக்கும், தாய் தந்தை ஆதியம்மையும் பகவமுனிவருமாகையால், அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம், என்பதற்கேற்ப, நாயனர் 'ஆதிபகவன்' என்றும், ஔவையார் 'ஆதி' யென்றும் முதற்செய்யுளில் கூறியதாலும், தாய்தந்தை இருவரை முன்னிட்டே சரீரமாகிய உலகைப்பெற்று, பூவுலகில் வந்து, நமக்கு முன்னவனை யறிவதாலும், தாய்தந்தையை வணங்கினரெனினுமொக்கும். ஔவை பெண்பாலாகை தாயைமட்டும் வணங்கினராகும். தாயைக்கொண்டே தந்தையை அறியவேண்டுமாகையால் மாதாவே விசேடமாகும். 'ஆதியாய்' என்றதால் தந்தையையும் குறிப்பதாகும்.

**2. பரமாய சத்தியுட் பஞ்சமா பூதந்**
**தரமாறிற் றேன்றும் பிறப்பு.**

உரை—பரம்பொருளிடத்தில் உண்டான பராசத்தியுள் அடங்கிய ஐந்துபூதங்களும் ஒன்றுடனென்று மாறினல் பிறப்பெனும் ஜென்மமானது தோன்றும்.

கருத்து—ஐந்து பெரிய பூதங்களின் பரிணமமே தேகமாகும்.

விசேஷம்—பாதத்திலிருந்து மாயையுண்டாகி, மாயையிலிருந்து சத்தி (வல்லமை) யுண்டாகியதால் 'பரமாய சத்தி' என்று கொள்ளலுமாம். மாயையின் சக்திக்கு 'மாயாசத்தி' என்பதாம். பராசத்தியினிகழ்வதே மாயா சத்தியாகையால் 'பரமாய சத்தி' என்றூர்.

மாயாசத்தியினிடமாகவே பஞ்சபூதந்தோன்றி தேகமாவதால் 'சத்தியுள்' என்றூர்,

3. ஓசை பரிச மூருவஞ் சுவைநாற்ற
மாசை படுத்து மளறு.

உரை—சத்தமும், பரிசமும், ரூபமும், ரசமும், கந்தமும் ஆகிய புலன் ஐந்தும் ஆசையை உண்டாக்குகின்ற சேருகும்.

கருத்து—புலனுகிய தன்மாத்திரை ஐந்தும் ஆசையையுண்டாக்கி ஆன்மாவாகிய அறிவைக் கெடுப்பவைகளாகும்.

விசேஷம்—நினைத்து, விசாரித்து, அதனைக்கொண்டுமென்மேலு மெழுப்புவதாகிய அகங்கார தமோகுணத்தில் உற்பவமாகிய ஐம்புலனுகியதாகியதால் 'ஆசைப்படுத்துமளறு' என்று கூறினர். புலனைந்தும் உயிர்கூறுகியதால் உயிராகிய அறிவைக் கெடுப்பதாகும்.

சத்தம்—கேட்கப்பட்டது; செவிக்குயிர்க்கூறு.

பரிசம்—சீதோஷ்ணுதியறிவு; (தோல்) உடம்புக்குயிர்க்கூறு.

உருவம்—காணப்பட்டது; கண்ணுக்குயிர்க்கூறு.

இரசம்—அறுசுவையறிவு; நாவுக்குயிர்க்கூறு.

கந்தம்—நற்கந்த துர்க்கந்தவறிவு; நாசிக்குயிர்க்கூறு.

4. தருமம் பொருள் காமம் வீடெனு நான்கு
உருவத்தா லாய பயன்.

உரை—அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களும், சரீரத்தாலுண்டான பிரயோஜனமாம்.

கருத்து—நான்கு புருஷார்த்தங்களும் சரீரத்தாலுண்டான பயனுகும்.

விசேஷம்—இம்மைக்கும் மறுமைக்கும் இன்றியமையாத புருஷார்த்தங்கள் நான்கும், ஆறறிவுடைய மானிடர்க்கே யுரியதாகியதால், அவை நான்கும் 'உருவத்தாலாயபயன்' என்ருர். அவ்வுருவம் மானிட உருவத்திற்கேயன்றி ஏனைய உருவத்திற்கன்று.

தருமம் என்பது முப்பத்திரண்டு தருமங்களன்றி,

"இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி நின்ற துணே." என,

பிரமசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி மூவர்களுக்கும் இல்லறத்திலிருப்போன் செய்யவேண்டிய தருமம் எனினும் ஒக்கும்.

தருமம் பொருளுள்ளோர்களே செய்தற்கியலும்; மற்ருேர்க்கு செய்ய வியலாதெனலாம்; அற்றன்று, பொருளிருக்கின் அப்பொருள் நல்வழியில் சம்பாதித்ததாக

இருக்கவேண்டியதோடு, திரிகரண சுத்தியோடு நல்வழியில் செய்யவேண்டும். பொருளில்லையேல் சரீரத்தால் ஆகவேண்டிய தருமங்களைச் செய்யவேண்டும். அப்படி செய்வதற்கு இயலாதாயின், தருமம் செய்யவேண்டும் என்ற ஓர் ஆசை மனத்தினிடமாக இருக்கவேண்டும். அப்படிக்கின்றி தீயவழிகளில் காலபேதத்திற் கிணங்கியும் படோடோபத்திற்கேற்றும் செய்யும் தருமங்கள், சுத்தத்திற்காக ஸ்நானம்செய்து, சேற்றை மேல்பூசிக் கொண்டதுபோலாகும்.

பொருள் என்பது கல்விப்பொருள் செல்வப்பொருள் என இருவகைப்படும். இரண்டனுள்,

'பொருளிலார்க் கிவ்வுலக மில்லை.'

என்பதனுல் செல்வப்பொருளே யீண்டு ஆவசியமாம். கல்விப்பொருளுக்கும், அறம், இன்பம், வீடு என்னும் மூன்றிற்கும் காரண காரியமாகவும், இருப்பது செல்வப்பொருளேயாம். ஆனதினுல், 'திரைகடலோடியுந் திரவியந்தேடு' என்றுர்.

இன்பம் என்பது இச்சை, ஆசை என்பதாகும். இன்பத்தால் துன்பமும், இச்சையால் லச்சையும், ஆசையால் மோசமும் அடைவது உலக இயற்கையாம். ஆகையால் நல்லின்பத்தை யனுபவிப்பதே புருஷார்த்தத்திற்கு லக்ஷணமாகும்.

வீடு என்பது மேற்கூறிய இம்மை போகபாக்கியமாகிய அறம் பொருள் இன்பம் மூன்றையுங்கடந்து மறுமை போகபாக்கியமாகிய மோட்சத்தை யடைவதாம்.

5. நிலைமைந்து நீர்நான்கு நீடங்கி மூன்றே
யுலவையிரண் டொன்று விண்.

உரை—பிருதிவி பூதமானது ஐந்தாவதாகவும், அப்பு பூதமானது நான்காவதாகவும், தேயு பூதமானது மூன்ருவதாகவும், வாயு பூதமானது இரண்டாவதாகவும், ஆகாயபூதமானது முதலாவதாகவுமாகும்.

கருத்து—பஞ்சபூதங்களும் அளவையில் மேற்கூறிய வரிசைக்கிரம எண்களை யடையும்.

விசேஷம்—பிருதிவி முதலாக ஆகாயமீருக கூறினும் வரிசைக் கிரமங்களால் ஆகாயம் முதலாக பிருதிவி யீருக மேற்சொன்ன எண்களை யுடையன வென்ருர்.

பிருதிவி, மண், அப்பு, நீர், தேயு, அக்கினி, வாயு, காற்று, ஆகாயம், சுத்தவெளி, இவைகளே பஞ்சபூதமாகும்.

6. மாயன் பிரம னுருத்திரன் மகேசனே
டாயுஞ் சிவமூர்த்தி யைந்து.

உரை—விஷ்ணுவும், பிரமனும், உருத்திரனும், மகேசனும், சுருதியிலாயும் சதாசிவனுமாக பஞ்சமூர்த்தங்களாம்.

கருத்து—மூர்த்திகள் ஐவர். இவர்களே பஞ்சமூர்த்திகளாகும்.

7. மாலயனங்கி யிரவி மதியுமையோ
டேலுந் திகழ்சத்தி யாறு

உரை—பொருந்தி விளங்குகின்ற சத்திகள், விஷ்ணு, பிரமன், அக்கினி, சூரியன், சந்திரன், உமை ஆக அறுவராகும்.

கருத்து—சத்திகள் ஆறு என்று விளக்குகிறது.

8 தோக்குதிரத் தோடுன் மூளை நிணமேன்பு
சுக்கிலந் தாதுக ளேழு.

உரை—சரீரம், இரத்தம், மாமிசம், மூளை, நிணம், எலும்பு, சுக்கிலம் ஆக தாதுக்கள் ஏழாகும்.

கருத்து—சப்த தாதுக்களை விளக்குகின்றது.

9. மண்ணோடு நீரங்கி மதியோடு காற்றிரவி
விண்ணெச்ச மூர்த்தியோ டெட்டு.

உரை—மண், ஜலம், அக்கினி, சந்திரன், காற்று, சூரியன், ஆகாயம், யாகதேவதை ஆக எட்டும், அஷ்ட மூர்த்தங்களாவார்.

கருத்து—இவர்கள் எண்மரும் அஷ்டமூர்த்தங்களாவர் என்பது.

விசேஷம்—இதனை மாணிக்கவாசகர்,

'நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாயமைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்.'

என்றார்.

10. இவையெல் லாங்கூடி யுடம்பாய வொன்றி
னவையெல்லா மானது விந்து.

உரை—மேலே சொல்லப்பட்ட இவைகளெல்லாம் சேர்ந்து சரீரமான ஒன்றின் குற்றங்களெல்லாம் உண்டானது சுக்கிலத்தாலானதாகும்.

கருத்து—விந்துவின் காரணத்தால் பஞ்சபூதங்களும், பஞ்சதன் மாத்திரைகளும், நான்கு புருஷார்த்தங்களும், பஞ்சமூர்த்திகளும், ஆறு சத்திகளும், ஏழு தாதுக்களும், எட்டு மூர்த்தங்களும், ஆகிய இவையெல்லாங்கூடி சரீரமுண்டானது என்பதாம்.

---

## 2 உடம்பின் பயன்.

1. உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லா
முடம்பினி லுத்தமனைக் காண்.

உரை—சரீரத்தைப்பெற்ற பிரயோஜன மாவதெல்லாம் சரீரத்திலுள்ள உத்தமனென்னும ஈஸ்வரனை அறிவதற்காகும்.

கருத்து—சரீரத்தைப்பெற்ற பிரயோஜனமானது சரீரத்திலுள்ளே விளங்கும் கடவுளை தரிசிப்பதற்கேயாம்.

விசேஷம்—ஜீவான்மாக்களிடத்தில் சர்வேஸ்வரன் வியாபித்திருப்பதால், அவனை யறிவதே எடுத்த சரீரத்திற்கு லக்ஷணமாகும். அதனால் 'உடம்பினிலுத்தமனைக் காண்' என்றார். இதனால்,

'தன்னையும் தனக்காதார தலைவனையுங் கண்டாயேல்' என்பதனாலறிக.

2. உணர்வாவ வெல்லா முடம்பின் பயனே
யுணர்க வுணர்வுடை யார்.

உரை—உணர்ச்சியாகும்படியான யாவும் சரீரத்தின் பயனாகும். அதை நல்ல உணர்ச்சியுடையவர்கள் தெரிந்துக்கொள்ளக் கடவர்.

கருத்து—சரீரங்களின் பயனே ஆன்மாக்களுக் குண்டாகும் உணர்ச்சியாம். ஆனதால் உணர்வுடையோர் உணரவேண்டியதாம்

விசேஷம்—'உணர்க உணர்வுடையார்' என்பது, உணர்ச்சி யுடையோர்களே அறிவுடையோர்களாகும், அறிவுடையோர்களே அதை அறியக்கடவர் என்பதாகும். சரீரத்தின் உணர்ச்சியே ஆன்மா அடையும்.

3. ஒருபய னுவ துடம்பின் பயனே
தருபயனுஞ் சங்கரனைச் சார்.

உரை—நமக்கு ஒப்பற்ற பிரயோஜனமாவது சரீரத்தினது பயனேயாகும். அந்த பிரயோஜனத்தைக் கொடுக்கும்படியான சிவபெருமானை அடைதலாம்.

கருத்து—சரீரத்தின் பிரயோஜனமாவது சிவபெருமானை சேர்தலாகும்.

விசேஷம்—நமது சரீரத்தின் பிரயோஜனம் சிவபெருமானை யடைதலால், சிவபெருமானையே நாம் அடைதல் வேண்டும்.

ஒருபயன் என்பது ஒப்பற்றபயன் நிகரற்றபயனும். நிகரற்றபயன் நாம் ஆவசியம் அடையவேண்டிய மோக்ஷமேயாம், அதனுல் 'ஒருபயன்' என்ருர்.

4. பிறப்பினுற் பேற்ற பயனுவ வெல்லாந்
துறப்பதாந் தூரேறிக்கட் சென்று.

உரை—ஜன்மத்தினுல் பெறப்பெற்ற பிரயோஜனங்களெல்லாம் உயர்ந்து பரிசுத்தமாகிய மார்க்கத்திற்போய் சகல இன்பங்களையும் விட்டொழிவதாகும்.

கருத்து—சர்வ இன்பங்களையுந் துறப்பதே பிறவியெடுத்ததின் பயனுகும்.

விசேஷம்—'எண்ணரிய பிறவிதனில் மானிடப்பிறவி யாதினும் அரிது அரிது, இப்பிறவிதப்பினு லெப்பிறவி வாய்க்குமோ யேதுவருமோ அறிகிலேன்' என்றதனுல் சர்வ பிறவிகளிலும் விசேஷப்பட்டதாகிய இந்த மானிடப் பிறவியிலேயே சிவபெருமானை யடையவேண்டும். அதன் பொருட்டே தீநெறியைத்துறந்து தூநெறியை அடைய

வேண்டும், தீநெறியுள்ளளவும் தூநெறி படையப்படாத தால் இரண்டையுங் கூறினர்.

**5. உடம்பினு லன்றி யுணர்வுதா னில்லை**
**யுடம்பினு லுன்னியதே யாம்.**

உரை—சரீரத்தினுலன்றி உணர்ச்சியாவ துண்டாவ தில்லை. ஆகையால், உடம்பினுல் நினைக்கப்பட்டதே யாகும்.

கருத்து—சரீரத்தினுல் உணர்ச்சியுண்டாவதே யல்லாமல் மற்றதினுல் உண்டாவதில்லை.

விசேஷம்—உண்டாகும் உணர்ச்சியானது சரீரத்தினுல் உண்டாவது நினைக்கப்பட்டதே என்பதினுல் 'உடம்பினு லுன்னியதேயாம்.' என்றுர்.

**6. மாசற்ற கொள்கை மனத்தி லடைந்தக்கால்**
**ஈசனைக் காட்டு முடம்பு.**

உரை—குற்றமற்ற குணமானது மனத்தில் உண்டானுல், சரீரமானது சர்வேஸ்வரனை உணர்விக்கும்.

கருத்து—சரீரமானது மனத்திலுள்ள குற்றமகன்றவுடன் ஈசனைக்காட்டும்.

விசேஷம்—உடம்பு மாயையில் கட்டுப்பட்டிருப்பதால் அதனுள்ளடங்கிய மனமானது சீக்கிரத்தில் பரிசுத்தமடையாது. அவ்வாறு அடையில் அந்த சரீரத்தால் சீக்கிரத்தில் கடவுளைக் காணலாகும்.

**7. ஓசை யுணர்வுக ளெல்லாந் தருவிக்கு**
**நேசந்தா னாய வுடம்பு**

உரை—சத்தம் முதலிய உணர்ச்சிகளெல்லாம் ஸ்திரீ புருஷர்களது நேசத்தினுலேயான சரீரமானது உண்டாக்கும்.

கருத்து—சரீரத்தின் தத்துவ அளவுப்படியே அறிவும் ஸ்திரீபுருஷ விருப்பத்தால் உடம்பும் தருவிக்கும்.

ஓசை என்றது, சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என ஐந்தாகும்.

8. உயிர்க்குறுதி யெல்லா முடம்பின் பயனே
அயிர்ப்பின்றி யாதியை நாடு.

உரை—ஆன்மாவுக்கு உறுதியைத் தருவதெல்லாம் சரீரத்தின் பிரயோஜனமேயாம். ஆகையால், சங்கையின்றி முதல்வனுகிய கடவுளை விரும்பு.

கருத்து—உயிர்க்கு உறுதியை சரீரமானது தருவதால் அதையே ஆதாரமாகக்கொண்டு சிவபெருமானை யடைய விரும்பு.

விசேஷம்—உடலை வளர்த்தான் உயிர் வளர்த்தானே என்பதைப்போன்று, உடலில்லையாயின் உயிர்க்குறுதி தேட இயலாதாகையால் அதைக்கொண்டு கடவுளை நாட வேண்டுமென்ருர்.

9. உடம்பினுற் பெற்ற பயனுவ வெல்லாம்
திடம்பட வீசனைத் தேடு.

உரை—சரீரத்தைப்பெற்ற எல்லாப் பிரயோசனங்களும் உறுதியாக உள்ளே ஈசனை ஆராய்வதாகும்.

கருத்து—சரீரம் உண்டானது கடவுளைத்தேடி அறிய வேண்டும்.

விசேஷம்—எப்பிறவிகளிலும் உயர்தர மானிடப்பிற வியை அடைந்தவர்கள் கடவுளை யடையவேண்டியது கடமையாகும்.

**10. அன்னத்தா லாய வுடம்பின் பயனெல்லாம்**
**முன்னோனைக் காட்டி விடும்.**

உரை—அன்னசத்துவால் உண்டான சரீரத்தின் பிரயோசனமெல்லாம் முதல்வனாகிய கடவுளைக் காட்டிவிக்கும்

கருத்து—சரீரத்தின் பிரயோசனமாவது சர்வேஸ்வரனை காட்டிவைக்கும்.

விசேஷம்—'அன்னத்தா லறைந்திட்டவீடு, அன்ன மொடுங்கினா லதுவே சுடுகாடு' என அன்னத்தினாலேயே சரீரமிருக்கும். சரீரத்தினாலே ஆன்மாவிருக்கும். ஆன்மாவுக்குச் சரீரமின்றிக் கடவுளைக்காண வியலாது; ஆனதால் அன்னமய சரீரமே கடவுளைக் காட்டிவிடும் என்றார்.

---

## 3. உள்ளுடம்பின் பயன்.

**1. கற்கலாங் கேட்கலாங் கண்ணாரக் காணலா**
**முற்றுடம்பா லாய வுணர்வு.**

உரை—பொருந்திய உள்ளுடம்பினால் உண்டான அறிவானது கற்பதற்கும், கேட்பதற்கும், கண்கள் நிறம்ப காண்பதற்குமாகும்.

கருத்து—உள்ளுடம்பின் உணர்ச்சியால் கற்க, கேட்க, கண்ணாரக் காண முதலிய சர்வகாரியங்களடைய அநுகூலமாகும்.

விசேஷம்—உள்ளுடம்பென்னும் சூக்குமதேகமாகிய தத்துவதேகமானது ஆன்மாவுக் குண்டாகியதால் கற்க லாங் கேட்கலாங் காணலாம். இல்லையாயின் எக்காரியமும் நடவாதாகும்

2. வெள்ளி பொன்மேனிய தொக்கும்வினையுடைய
உள்ளுடம்பி னுய வொளி.

உரை—வினையினுலுண்டான சூட்சுமதேகத்தின் பிர காசமானது வெள்ளி பொன்னின் சொரூபத்தை ஒப் பாகும்

கருத்து—சூட்சுமதேகத்தின் பிரகாசமானது வெண் மைநிறமும் பொன்மை நிறமும்போல விளங்கும்.

விசேஷம்—சரீரத்தினுள்ளிருக்கும் சூட்சும பிரகாச மானது உற்றுநோக்கில் வெண்மை பொன்மை நிறமாகத் தோன்றும் என்ருர். இதனை,

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சியடி—அம்மா
அற்புதக் காட்சியடி. என்பதினுலறிக.

3. சென்றுண்டு வந்து திரிதரு முள்ளுடம்பு
மென்றுங் கெடாத திது.

உரை—இந்த சூட்சும சரீரமானது வெளிசென்று வேண்டுவன புசித்து திரும்பிவந்து திரியும். அது என் ஞான்றும் அழிவுபடாததாகும்

கருத்து—உள்ளுடம்பானது சகல காரியங்களும் வெளியேகி முடித்து பழயபடியே வந்து இயங்குவதால் என்றும் அழியாததாகும்.

விசேஷம்—தூலசரீரமின்றி சூட்சும சரீரம் இல்லை. தூலசரீரம் பகிர்முக விஷயாதிகளைச் செய்யும், சூட்சும சரீரமானது அந்தர்முக விஷயாதிகளைச் செய்யும். அது செய்யும் விஷயாதிகள் தன்னையன்றி பிறர்க்குத் தெரிய மாட்டாது. இதுவே மனோவியாபாரம் ஆனதால் இதனை 'உள்ளுடம்பு' என்றார்.

4. ஒருபய னுண்டு மகிழ்ந்துட னிற்கு
மொருபயனைக் காட்டு முடம்பு.

உரை—உண்டாகின்ற பிரயோசனத்தை அநுபவித்து மகிழ்ந்து ஸ்தூலசரீரத்துடன் கலந்திருக்கின்ற சூக்கும சரீரமானது ஒப்பற்ற பிரயோசனத்தைக் காட்டும்.

கருத்து—உள்ளுடம்பு வெளியுடம்புடன் கலந்து சர்வ பிரயோசனங்களையும் உணர்த்துவிக்கும்

விசேஷம்—தூலசரீரத்திற்கு உடனுயிருக்கும் சூட்சுமசரீரமானது விஷயாதிகளின் பிரயோசனத்தை அநுபவித்தும் மகிழ்ந்தும் முடிவில் ஒப்பற்ற பிரயோசனத்தைக் காட்டும்.

ஒருபயன் என்பது நிகரற்ற பிரயோசனம். அதாவது தனக்கு ஆதாரமாகிய தலைவன் என்னும் சிவபெருமான் எனினும் ஒக்கும்.

5. அல்லற் பிறப்பை யகற்றுவிக்கு மாய்ந்தாய
தொல்லை யுடம்பின் றொடர்பு.

உரை—ஆராய்ந்து உண்டான பழமையாகிய உடம்பின் தொடர்ச்சியானது துன்பத்தை உண்டாக்குகின்ற ஜென்மத்தை யகற்றுவிக்கும்.

கருத்து—சூட்சும தேகமானது பிறவியை அகற்றும்.

விசேஷம்—உள்ளே பிரகாசிக்கும் சரீரமானது தன் உணர்வினுல் துன்பத்தி லீடுபடும் பிறவி ஜென்மத்தை ஒழிக்கும் என்ருர்.

6. நல்வினையுந் தீவினையு முண்டு திரிதருஞ்
செய்வினைக்கும் வித்தா முடம்பு.

உரை—சூக்கும சரீரமானது நல்ல வினைகளையும் தீய வினைகளையும் அநுபவித்து திரியும். மற்ற உயிர்களால் செய்யும் இருவினைகட்கும் காரணமாகும்.

கருத்து—சூக்கும சரீரமானது தானனுபவிக்கும் இரு வினைகளுக்கும், பிறவுயிர்கள் செய்யும் இருவினைகளுக்கும் காரணமாகும்.

விசேஷம்—செய்யும் இருவினைக ளெல்லாவற்றிற்கும் சூக்குமதேகமே வித்தாகுமென்பதால், ஸ்தூலசரீரத்தி ஞல் பயனில்லையென்பதாகும். உள்ளுடம்பு கருதாது வெளியுடம்பு எது ஒன்றையும் செய்யாது என்பதால் இரண்டிற்கும் காரணம் உள்ளுடம்பேயாம்.

7. உள்ளுடம்பின் வாழ்வன வொன்பது மேழைக்
கள்ளவுடம் பாகி விடும்.

உரை—சூக்கும சரீரத்தில் வாழ்வனவாகிய ஒன்பது துவாரங்களும் உயிர்களுக்கு திருட்டு சரீரமாகிவிடும்.

கருத்து—சூக்குமதேகமானது நவத்துவாரங்களோடு கலந்து வாழப்பட்டதாகும்.

விசேஷம்—இரு உடம்பிற் கிடையாய நவத்துவாரங் கள் கூடியதேயாம். வெளிக்கும் உள்ளுக்கும் உள்ள சரீ ரத்திற்கு செய்யும் விஷயாதிகளில் கூடி நல்லவை செய்யுங்

கால் நல்லுடம்பாக்கும். ஈண்டு நல்லவையேற்று தீயவை விலக்குவதால், தீயவை முன்னிட்டு 'கள்ளவுடம்பாகி விடும்' என்றார்.

8. பொய்க்கெல்லாம் யாசனமா யுள்ளதற்கோர் வித்
மெய்க்குள்ளா மாய வுடம்பு. [தாகு

உரை—ஸ்தூலசரீரத்திற்கு உள்ளே யிருக்கப்பட்ட சூக்கும சரீரமானது எல்லாபொய்க்கும் ஆதாரமாயிருக்கின்ற சரீரத்திற்கு ஓர் விதையாகும்.

கருத்து—சூக்குமசரீரமே பொய்யாகிய ஸ்தூலசரீரத்திற்கு ஆதாரமாகும்.

விசேஷம்—பொய்யாகிய ஸ்தூலசரீர மென்றபோது மெய்யாகிய சூக்குமசரீர மென்பதாம். சூக்குமம் அழியாததால் மெய்யென்றார்.

'தேகமானபொய்யை மெய்யெனக்கருதி
யையவையமிசை வாடவோ' என்பதினாலறிக.

ஸ்தூலசரீரமானது சூக்குமசரீரமில்லாது வழிகிலையாதாகையால் 'வித்தாகு மெய்க்குள்ளாக மாயவுடம்பு' என்றார்.

9. வாயுவினு லாய வுடம்பின் பயனே
யாயுவி னெல்லை யது.

உரை—பிராணவாயுவினால் உண்டான தேகத்தினது பிரயோசனமாவது ஆயுளின் அளவை யுடையதாகும்.

கருத்து—பிராணவாயுவானது விந்துவில் எவ்வளவு அளவை கலந்து கருப்பையில் பாய்ந்து போதிகின்றதோ அவ்வளவு கால அளவே ஆயுள் அளவையாகும்.

விசேஷம்—பிராணவாயு விந்துடன் கலந்து பாயும் போது எவ்வளவு அளவை இயங்கி பொருந்துமோ அவ்வளவு கால அளவே ஆயுள் ஆகும் என்றதனுல், அதனேடு இயங்கி பொருந்தாவிடில் கருவில்லையாம். பூரண அளவை ஏற்படில் வயது நூற்றியிருபதென்றும், அதில் எவ்வளவு குறையுமோ அவ்வளவே ஆயுள் குறையுமென்பது கருவுரு சாஸ்திரம். இந்த அளவை முதலியவை யறிவது சரீரநூல் உணர்ந்தோர்க்கேயன்றி மற்றவர்களுக்கு விளங்காது.

10 ஒன்பது வாசலு மோக்க வடைத்தக்கால்
லன்பதி லொன்று மரன்.

உரை—நவத்துவாரங்களையும் ஒருப்பட அடைத்தக்கால் அன்பில் சிவபெருமான் சேர்தலாகும்.

கருத்து—நவத்துவாரங்களை யடைத்து யோகம் செய்வோர் அன்பில் சிவபெருமான் கலந்திருப்பான்.

விசேஷம்—யோகசாதன முடையோரே நவத்துவாரங்களில் வாயுபோகாமல் அடைக்க சக்தியுடையோராவர். அவ்வாறு அடைத்து யோகஞ்செய்வோர்களுக்கு அன்பில் சிவன் கலந்து தனிநிலை யடையலாம்.

அன்பில் சிவம் என்றது,

"அன்புசிவமென் றிரண்டென்ப ரறிவிலாதார்
அன்புசிவமென் றுரு மறிகிலார்
அன்புசிவமென் றுரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருப்பாரே," என்பதனுலறிக.

---

## 4. நாடி தாரணை.

**1. எழுபத்தீ ராயிர நாடி யவற்றுள்
முழுபத்து நாடி முதல்.**

உரை—சரீரத்திற்கு எழுபத்திராயிர நாடி என்று சொல்லப்பட்ட தொகையில் முதல்மையாகிய நாடிகள் பத்தேயாம்.

கருத்து—எழுபத்திராயிரநாடிகளில் பத்து நாடிகளே முதன்மையாம்.

விசேஷம்—சரீரமானது எழுபத்திரண்டாயிர நாடிகளால் கட்டப்பட்டது. அந்நாடிகள் மாறி மாறி சூரியனது கிரணங்களைப்போல் கலந்து விளங்கும். விளங்கினும் அவைகளில் அத்தி, அலம்புடை, இடை, காந்தாரி, குரு, சங்கினி, சிகுவை, சுழிமுனை, பிங்கலை, புருடன் என்னும் தசநாடிகளே முதன்மையாகும் என்றார்.

**2. நரம்பெனு நாடி யிவையினுக் கெல்லா
முரம்பெறு நாடியொன் றுண்டு.**

உரை—நரம்பென்று சொல்லப்பட்ட நாடி இவைகளுக்கெல்லாம் பலம்பொருந்து நாடி ஒன்று இருக்கின்றது.

கருத்து—எல்லா நாடிகளுக்கும் ஆதாரமான நாடி ஒன்று இருக்கிறது.

விசேஷம்—சரீரத்திற்கு கட்டப்பட்ட நாடிகள் எழுபத்திராயிரமும், அவைகளுக்கு முதன்மையாகியது பத்தும், அதிலும் முக்கியமானது ஒன்றும் என்றது சர்வ நாடிகளுக்கு ஆதாரமான நாடி ஒன்றேயென்றும் கூறினர்.

3. உந்தி முதலா யுறமுடிகீழ் மேலாய்
பந்தித்து நிற்கும் பரிந்து.

உரை—தொப்பூழ்முதலாக பொருந்தி சிரசுவரைக்கும் கீழு மேலுமாக விரும்பி பந்தித்திருக்கும்.

கருத்து—நாடியானது உந்திமுதல் சிரசுவரை வுயர கட்டுப்பட்டிருக்கிறது.

விசேஷம்—எழுபத்திரண்டாயிரம் நாடி எனும் நரம்பானது நமது ஒவ்வொரு சரீரத்திற்கும் ஆதாரமானதால் அவைகட்கு இருப்பிடம் உந்தியே. அங்கெழுந்து இடம் வலமாக, வலம் இடமாகப் பின்னி நிற்கும்.

நமது சரீரத்தைக் காப்பாற்றுதற்கு முக்கிய ஸ்தானம் உந்தியே யாகையால் 'உந்திமுதல்' என்றார்.

4. காலோடு கையி னடுவிடத் தாமரை
நூல்போலு நாடி நுழைந்து.

உரை—நரம்பானது கால்களிடத்தும், கைகளிடத்தும், நடுவிடங்களிலும் தாமரை நூல்போல கலந்துறும்.

கருத்து—நரம்பானது தாமரை நூல்போல கால், கை, நடுமுதலி விடங்களிற் கலந்திருக்கிறது.

விசேஷம்—நரம்பானது சரீரத்தில் முழுதும் கலந்திருப்பது பற்றி 'காலொடு கை' என்றும் காலிலிருந்து சிரசளவும் எங்கும் தாமரை நூல்போல் பரவி பின்னியிருப்பதால் 'நடுஇடை' என்றும் கூறினர்.

5. ஆதித்தன் றன்கதிர் போலவங் நாடிகள்
பேதித்துத் தாம்பரந்த வாறு.

உரை—சூரியனுடைய கிரணங்களைப்போல அந்த நரம்புகள் பேதித்து அவைகள் கலந்த விதமாகும்.

கருத்து—நமது உடம்பில் எழுபத்திரண்டாயிர நரம்புகளும் சூரியன் கதிர்போல மாறி மாறி பரவி கலந்திருக்கும்.

விசேஷம்—பேதித்து என்றது நரம்புகள் கத்திரிக்கோல் மாறல்போல வலம் இடமாக மாறியிருப்பதே அதுகள் இயற்கையாகும்.

தாம்பரந்தவாறு என்பது அதனதன் சுபாவப்படியேயாம்,

6 மெய்யெல்லா மாகி நரம்போ டெலும்பிசைந்து
 பொய்யில்லை நாடிப் புணர்வு.

உரை—நரம்பினது கூட்டுரவானது சரீர முழுமைக்குமாகி நரம்புகளுடன் எலும்புகளும் கலந்து நிற்கும். இது பொய்யல்ல உண்மை.

கருத்து—நரம்புகளானது சரீரமுழுமைக்கும் எலும்புகளுடன் கலந்தே யிருக்கும்.

விசேஷம்—நரம்புகளில்லாதபோது சரீரம் நிலையாதாகையால் 'மெய்யெல்லாம்' என்றார்

பொய்யில்லை என்றதற்கு எதிர்மறைச்சொல் மெய்யாகையால், அது உண்மை என்பதாம்.

7. உந்தி முதலாகி யோங்காரத் துட்பொருளாய்
 நின்றது நாடி நிலை.

உரை—நாடியின் நிலையானது உந்திமுதலாய் பிரணவத்திற்கு அந்தர்முகப்பொருளாய் இருக்கிறது.

கருத்து—சரீரத்துள் நாடிகளின் நிலையானது கொப்பூழ்முதல் ஓங்காரம் வரையில் ஆதார ஸ்தானமாகும்.

விசேஷம்—நாடிகள் உந்தியிலெழுந்தே ஓங்காரந்தொட்டு சரீரமுழுதும் பரவுவதால் நமக்கு ஆதாரம் உந்தியென்றே கருதலாகும்.

8. நாடிக ளூடுபோய்ப் புக்க நலஞ்சுடர்தான்
வீடு தருமாம் விரைந்து.

உரை—நரம்புகளின் வழியே சென்று புகுந்த நலம் பொருந்திய தேஜோமயப் பொருளானது விரைவில் மோட்சத்தைக் கொடுக்கும்.

கருத்து—ஸ்தூலக நரம்புகளின் சூட்சுமமாய் விளங்கும் தேஜோமயத்தை அடைவதே மோட்சமாம்.

விசேஷம்—கடவுள் ஒவ்வொரு ஆன்மாக்களிலும் நரம்புகள் வழியே கலந்திருப்பவன். அதில் பிரகாசிப்பவன். இதனை யுணர்வுடையோர்களே யுணரலாகும். அவ்வாறுணர்வதே மோட்சமாகும். இதனால் மோட்சபூமி நமக்குள்ளேயேயன்றி அன்னியிலில்லையென விளங்கக் கூறியதாகும்.

9. நாடி வழக்க மறிந்து செறிந்தடங்கி
நீடொளி காண்ப தறிவு.

உரை—நரம்புகளின் வழக்கங்களை நன்கு தெரிந்து அதுவழியே நெருங்கி ஒடுங்கி நின்தேஜஸை தெரிசிப்பது அறிவு.

கருத்து—நரம்புகளின் வழியறிந்து கடவுளை தரிசிப்பது அறிவாகும்.

விசேஷம்—சிவபெருமானைக் காண்பதற்கு நாடியே ஆதாரமாகும் அவ்வாறு இயற்றுதற்கு முதன்மை அறிவேயாம்.

10. அறிந்த டங்கி நிற்குமந் நாடிக டோறுஞ்
செறிந்தடங்கி நிற்குஞ் சிவம்.

உரை—அறிந்து, அடங்கி, இருக்கின்ற அந்த நாடிகளிலெல்லாம் சிவம் நிறைந்து மறைந்து இருக்கும்.

கருத்து—சிவம் எப்போதும் நரம்புகளிலெல்லாம் நிரைந்திருக்கும்.

விசேஷம்—சிவம் நரம்புகள்தோறும் தோன்றுது போல் மறைந்திருக்கும்.

சிவம் என்பது:—சீவம், உயிர், கடவுள்.

---

## 5. வாயுதாரணை.

1. மூலத்திற் றேன்றி முடிவிலிரு நான்காகி
கால்வெளியிற் பன்னிரண்டாங் காண்.

உரை—வாயுவானது மூலாதாரத்தில் உற்பவமாய், முடிவினில் எட்டாகி வெளியினிடத்து பன்னிரண்டாகும் காண்பாயாக.

கருத்து—வாயுவானது மூலாதாரத்திற்றேன்றி எட்டாகி, பரந்து வெளியாகும்போது பன்னிரண்டாகும்.

விசேஷம்—வாயுதாரணை செய்வோர் இதனை முதலில் கவனித்தல் வேண்டும்.

2. இடைபிங் கலைகளி ரேசக மாற்ற
லடையு மரனு ரருள்.

உரை—இடைகலையிலும், பிங்கலைகளிலும் இரேசகஞ் செய்தால் சிவபெருமானுடைய திருவருள் உண்டாகும்.

கருத்து—இரேசகம், பூரகம், கும்பகங்களைச் செய்யில் கடவுள் திருவருள் கைகூடும்.

விசேஷம்—இடைகலை - இடதுநாசியிலுலாவும் சுவாசம். பிங்கலை - வலதுநாசியிலுலாவும் சுவாசம்.

3. அங்குலியான்மூடி முறையா லிரேசிக்கிற்
பொங்குமாம் பூரகத்தினுள்.

உரை—விரல்களினல் மூடி விதிப்படி இரேசகஞ்செய்தால் அது பூரகத்திலே விளங்கும்.

கருத்து—விரல்களால் நாசியை மூடி அளவுபடி இரேசக பூரகம் செய்யில் அருளானந்தம் விளங்கும்.

4. எண்ணிலியூழி யுடம்பா யிரேசிக்கி
லுண்ணிலிமை பெற்ற துணர்வு.

உரை—அநேககாலங்கள் உடம்பில் ஆராய்ந்து இரேசகஞ்செய்தால் உணர்ச்சியானது உள்நிலையைப் பெற்றதாகும்.

கருத்து—அநேககாலங்கள் பிராணயாமஞ்செய்தால் சரீரம் உறுதியை யடையும்

5. மயிர்க்கால் வழியெல்லா மாய்கின்றவாயு
யுயிர்ப்பின்றி யுள்ளே பதி.

உரை—சரீரத்தின் மயிர்க்கால் வழிகளிலெல்லாம் அழிகின்ற காற்றை பெருமூச்சுவிடாமல் அந்தர்முகத்தில் அடக்கஞ்செய்வாய்.

கருத்து—மயிர்க்கால் வழியெல்லாம்பாயும் சுபாவமுடையகாற்றை உள்ளே அடக்கவேண்டும்.

6. இரேசிப் பதுபோல பூரித்து நிற்கிற்
றராசுமுனை நாக் கதுவேயாம்.

உரை—இரேசகஞ் செய்வதுபோல பூரகஞ் செய்திருந்தால் நாக்கானது, தராசுமுனைபோல் நிற்கும்.

கருத்து—இரேசகத்தின் அளவுபோலவே பூரகமும் அளவாய்ச்செய்யில் நாக்கு தராசுமுனைபோல நடுநிலையாய் நிற்கும்.

7. கும்பகத்தி னுள்ளே குறித்தரனைத் தானோக்கிற்
றும்பிபோ னிற்குந் தொடர்ந்து.

உரை—கும்பகத்தில் சிவபெருமானைக் குறிப்பாக நோக்கி தரிசிக்கில் வாயுவானது தும்பிபோலிருக்கும்.

குறிப்பு—பிராணவாயுவை இருவழியிலும் செல்லவிடாமல் கும்பகஞ்செய்யில் அங்கு வாயுவானது தும்பிபோல அசைவற்று நிற்கும்.

விசேஷம்—இரேசகம்-சுவாசத்தை வெளியேவிடுதல், பூரகம்-சுவாசத்தை உள்ளே இழுப்பது, கும்பகம்-சுவாசத்தை அடக்குதல்.

8. இரேசக பூரக கும்பக மாற்றிற்
றராசுபோ னிற்குந் தலை.

உரை—இரேசகத்தையும், பூரகத்தையும், கும்பகத்தையும் கிரமப்படி செய்யில், சிரசு தராசு முனைபோல் நிற்கும்.

கருத்து—இரேசக, பூரக, கும்பத்தை விதிப்படி செய்யில் சிரசு அசைவற்று நிற்கும்.

விசேஷம்—தராசுமுனை - இருபாகத்திற்கும் நடுநிலை காட்டும் அடையாளம் (நடுமுள்)

9. வாயு வழக்க மறிந்து செறிந்தடங்கி
லாயுட் பெருக்க முண்டாம்.

உரை—சுவாசம் மாறும்படியான வழக்கத்தை நன்று யறிந்து ஒருமித்து ஒடுங்கினால் ஆயுள் விருத்தியுண்டாகும்.

கருத்து—வாயுவின் பழக்கமறிந்து உள்ளே அடக்கினால் ஆயுசு விருத்தியடையும்.

10. போகின்ற வாயு பொருந்திற் சிவமொக்கும்
தாழ்கின்ற வாயு வடக்கு.

உரை—வெளியே போகின்ற சுவாசம் சரீரத்திற்குள் அடங்கினால் சிவத்திற் கொப்பாகும். அவ்வாறு கழியும் சுவாசத்தை உள்ளே அடக்கவும்.

கருத்து—வெளியே கழியும் சுவாசத்தை உள்ளே அடக்கினால் சிவபெருமானைக் கூடும்.

---

## 6. அங்கிதாரணை.

1. அந்தரத்தி லங்கி யழல்போலத் தானோக்கிற்
பந்தம் பிறப்பறுக்க லாம்.

உரை—முடிவில் மூலாக்கினியை பிரகாசம்போல் தரித்த யோகியானவன் பந்தமான ஜென்மத்தை அகற்றலாம்.

கருத்து—கடைசியில் யோகிகள் மூலாக்கினி தேஜஸை தரிசித்தால் பிறப்பை வாராதொழிக்கலாம்.

2. உள்ளும் புறம்பும் மொருங்கக் கொழுவூறிற்
கள்ளமல மறுக்க லாம்.

உரை—உள்ளிலும் வெளியிலும் ஏகமாய் கொழுமை பூறுமானல் வஞ்சனையையுடைய மாய்கையை அறுக்கலாம்.

கருத்து—அகமும் புறமும் ஏகமாய்ப் பார்ப்போர், மாய்கையை ஒழித்தவராவார்கள்.

3. எரியுங் கழல்போல் வுள்ளுற நோக்கிற்
கரியுங் கனலுருவ மாம்.

உரை—எரிகின்ற அக்கினியைப்போல உண்முகத்தில் தரிசித்தால் அடுப்புக்கரியும் நெருப்பின் ரூபமும் அடைவதாகும்.

கருத்து—அந்தர்முகத்தில் அனலுருவத்தை தரிசனம் செய்யவேண்டும்.

விசேஷம்—இது ஞானதீபம். இத்தரிசனமே மோட்சமென்பது.

4 உள்ளங்கி தன்னை யொருங்கக் கொழுவூறில்
வெள்ளங்கி தானும் விரைந்து

உரை—உள்ளே யிருக்கும் மூலாக்கினியை ஒருங்க கொழுமையானது ஊறினல் சீக்கிரத்தில் அது வெண்மை நிற அக்கினியாகும்.

கருத்து—மூலாக்கினியை வலுபெறச்செய்தால் வெள்ளங்கியாகும்.

5. உந்தியி னுள்ளே யொருங்கச் சுடர்பாய்ச்சி
லந்தி யழலு ருவமாம்.

உரை—மூலாதாரத்தில் ஏகமாக அக்கினியைப் பாய்ச்சியினல் மாலைநேரத்தில் சரீரம் அக்கினிமயத்தை யடையும்.

கருத்து—மூலாக்கினியை அதிகப்படுத்துவதால் சரீரம் அக்கினிமயத்தை யடையும்.

6. ஐயைந்து மாய வகத்துளேறி நோக்கிற்
பொய்யைந்தும் போகும் புறம்.

உரை—இருபத்தைந்து தத்துவங்களும் ஒழிய சரீரத்தினுள்ளே மூலாக்கினியை தரிசித்தால் ஐந்து பொய்களும் வெளியாகிப்போகும்.

கருத்து—மூலாக்கினியை தரிசிப்பதால் ஐம்பொய்களும் வெளிப்பட்டுப் போகும்.

7. ஐம்பதோ டொன்று மழல்போலத் தானோக்கி
லும்ப ரொளியாய் விடும்.

உரை—ஐம்பத்தோரட்சரங்களையும் அக்கினிசொரூபமாக தான் நோக்கினால் தெய்வ ஒளியாய் கைகூடும்.

கருத்து—தேஜோமயத்தை தரிசித்தால் சரீரமும் தேஜோமயத்தை யடையும்.

விசேஷம்—உம்பர் ஒளி என்றது கடவுளார் நோக்கும் கடவுளே தேஜோமயமாம்.

8. தூண்டுஞ் சுடரைத் துளங்காமற் றானோக்கில்
வேண்டுங் குறைமுடிக்க லாம்.

உரை—தூண்டப்படுகின்ற ஞானச்சுடரை அசையாயாமல் பார்த்தால் மனத்தில் விரும்பப்படும் குறைகளை முடிக்கலாம்.

கருத்து—தேஜோமயத்தை அசையாமல் பார்ப்பவர்கள் ஏது குறையும் அற்றவராவார்கள்.

9. உள்ளத்தா லங்கி யொருங்கக் கொழுவூறில்
மெள்ளத்தான் வீடாம் விரைந்து

உரை—மனத்தினுல் நெருப்பு முழுமையும் கொழுவூறினுல், மோட்சமானது பொறுமையோடு விரைந்துண்டாம்.

கருத்து—அக்கினிவாசமே மோட்சமென்பதாம்.

10. ஒள்ளிதா யுள்ள சுடரை யுறநோக்கில்
வெள்ளியா மாலை விளக்கு.

உரை—பிரகாச முற்றிருக்கின்ற தேஜோமயத்தை பொருந்தப் பார்த்தால் மாலையினுலுண்டான விளக்கானது வெள்ளிபோல விளங்கும்.

கருத்து—வெளிச்சமே மோட்சமென்பதாம்.

---

7. அமுததாரணை.

1. அண்ணுக்குத் தன்னை யடைத்தங் கமிர்ந்துண்ணில்
விண்ணோர்க்கு வேந்தனு மாம். [ணில்

உரை—உள்ளே மேல்நாக்கை மேல்வழிக்கு அடைத்து அங்குண்டாகின்ற அமுர்தத்தை சாப்பிட்டால், தேவர்க்கு அதிபதியாகும் இந்திரனுமாகலாம்.

கருத்து—அமுதபாணமே இந்திரபோகமாகும்.

2. ஈரேண் கலையி னிரைந்தவமிர் துண்ணில்
பூரண மாகும் போலிந்து.

உரை—பதினன்கு கலைகளிலும் பூரணமாயிருக்கும் அமிர்தத்தை உட்கொள்வதால் பரிபூரணத்தை படையலாம்.

கருத்து—அமிர்தம் உண்ணுவது மோட்சமாகும்.

3. ஓங்கார மான கலசத்தமிர் துண்ணில்
போங்காலை மில்லை புரிந்து

உரை—பிரணவாகாரமாயிருக்கும் கலசத்துள்ள அமுதத்தை பாணஞ்செய்தால் இறக்குங்காலம் வருவதில்லையாகும்.

கருத்து—அமுதமுண்டவர்க்கு மரணமில்லை என்பது.

4. ஆன கலசத் தமிர்தை யறிந்துண்ணில்
போனகம் வேண்டாமற் போம்.

உரை—பொருந்திய கலச அமிர்தத்தை அருந்திடில் சாப்பாடு வேண்டாமற் போய்விடும்.

கருத்து—யோகாமிர்தத்தை யுண்பவர்கள் என்றைக்கும் ஆகாராதிகள் வேண்டாதவராவார்கள்.

5. ஊறு மமிர்தத்தை யுண்டியுறப் பார்க்கில்
கூறும் பிறப்பறுக் கலாம்.

உரை—சுரக்கும் அமுதத்தை ஆகாரமாகப் பார்த்தால் சொல்லப்படும் ஜென்மக்கருவை ஒழிக்கலாம்.

கருத்து—யோகத்தினலுண்டாகும் அமிர்தத்தை யுண்பவன் இனிவரும் ஜென்மவேரை அறுப்பவனகும்.

6. ஞான வொளிவிளக்கா னல்லவமிர் துண்ணி
ஆன சிவயோகி யாம்.

உரை—ஞானப்பிரகாசமுடைய தீபத்தால் உயர்வாகிய அமிர்தத்தை உண்டால் பொருத்தமான சிவயோகியாககூடும்.

கருத்து—யோகஞானத்தால் பெருகும் அமிர்தத்தை பானஞ்செய்தால் உயர்வாகிய சிவயோகியாவதற்கு ஐயமில்லை.

விசேஷம்—ஞானம், ஒளி, விளக்கு, அமிர்தம் என்னும் நாமமெல்லாம் ஒன்றே பொருள்படும்

7. மேலை யமிர்தை விளங்க மற்று உண்டாயில்
காலனை வஞ்சிக்க லாம்.

உரை—உயர்வாகிய சிரசில் விளைந்து வருகின்ற அமிர்தத்தை ஒழியாமல் உண்ணப்பட்டால் எமனை வஞ்சனை செய்யக்கூடும்.

கருத்து—மேற்பட்ட ஸ்தானத்தில் வரும் அமிர்தத்தை பருகினல் எமபயமின்றி சிரஞ்சீவியா யிருக்கலாம்.

8 காலன லூக்க கலந்த அமிர் துண் ணில்
ஞான மதுவா நயந்து.

உரை—காற்றின் அனல் ஊத்தி அதனோடு கலந்த அமிர்தத்தை அருகினல் விரும்பிய ஞானம் அதுவேயாகும்.

கருத்து—காற்றும் அனலும் கலந்து பொழியும் அமிர் துண்பதே ஞானமாகும்.

விசேஷம்—இந்த அமிர்தமே ஞானப்பால் என்று சொல்லப்படும்.

9. எல்லையி னின்னமிர்த முண்டாங் கினிதிருக்கில்
தொல்லை முதலோளி யே யாம்.

உரை—அளவு சொல்லக்கூடாத இனிய அமிர்தத்தையுண்டு அவ்விடத்தில் இன்புற்றிருந்தால் பழமையாகிய முதல்வன் பிரகாசமேயாகும்.

கருத்து—பேரின்ப அமிர்தத்தை யுண்டிருக்கில் சிவ பெருமானுடைய சொரூபமேயாகும்.

10. நிலா மண்டபத்தி நிறைந்த வமிர்துண்ணில்
உலாவலா மந்திரத்தின் மேல்.

உரை—சந்திர மண்டபத்தின்கண் நிறைந்திருக்கின்ற அமிர்தத்தை பருகினல் மேலாகாயத்தில் வாசம் செய்ய லாம்.

கருத்து—சந்திரமன்டல அமிர்தத்தைப் புசித்தால் ககனசஞ்சாரம் செய்யலாம்.

---

8. அர்ச்சனை.

1 மண்டலங்கண் மூன்று மருவ வுடனிருத்தி
அண்டரனை யர்ச்சிக்கு பார்.

உரை—சந்திரமண்டலம் சூரியமண்டலம் அக்கினி மண்டலமென்னும் மும்மண்டலங்களை சேர, அங்கு உடனே யிருக்கச்செய்து பொருந்தும் சிவபெருமானை அர்ச் சனைசெய்யு மார்க்கமாகும்.

கருத்து—சோமசூரியாக்கினி என்னும் மும்மண்டலங் களையும் சேர்ந்து அரனை அர்ச்சனைசெய்வது சகாய மார் க்கமாகும்.

2. ஆசனத்தைக் கட்டி யான்றன்னை யர்ச்சித்துப்
பூசனைசெய் துள்ளே டுணர்.

உரை—ஆசனங்களை எற்படுத்திக்கொண்டு ஈஸ்வரனை அர்ச்சனைசெய்து பூசித்து மனத்துள்ளே கலப்பாயாக.

கருத்து—ஆசனங்கொண்டு யோகத்தால் சிவபெருமானைக் கலக்கவேண்டும்.

விசேஷம்—அறுபத்துநான்கு ஆசனமிருப்பினும் பத்மாசனமும் சுகாசனமுமே ஏற்றதாகும்.

3. உள்ளமே பீட முணர்வே சிவலிங்கந்
தெள்ளிய ரர்ச்சிக்கு மாறு.

உரை—ஆராய்ந்து தெரிந்தயோகிகள் மனமே பீடமாகவும், உணர்ச்சியே சிவலிங்கமாகவும் அர்ச்சனைசெய்யும் விதமாகும்.

கருத்து—யோகஞானிகள் அந்தர்முகமாக இருதய கமலத்திலேயே வணங்குவார்கள்.

4. ஆதாரத் துள்ளே யறிந்து சிவனுருவை
பேதமற வர்ச்சிக்கு மாறு.

உரை—சிவபெருமானுடைய ரூபத்தை ஆறு ஆதாரங்களுக்குள்ளே அறிந்து வித்தியாசமில்லாமல் அர்ச்சனை செய்யும் விதமாகும்.

கருத்து—ஆராதாரத்தில் சிவபெருமானை அர்ச்சிக்கும் வழியாகும்.

விசேஷம்—ஆராதாரமாவது:—மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாதகம், விசுத்தி, ஆக்ஞை என ஆறுகும்.

மூலாதாரந்தொட்டு ஆறுவது மேல் ஆதாரமாகிய ஆக்ஞையை யடைவதே மோட்சவிதமாகும்.

5. பூரித் திருந்து புணர்ந்து சிவனுருவைப்
பாரித்தங் கர்ச்சிக்கு மாறு.

உரை—பூரகஞ்செய்து கலந்து சிவபெருமானுடைய சொரூபத்தைத் அவ்விடத்தில் அர்ச்சிக்கும் விதமாகும்.

கருத்து—பூரகத்தால் சிவபெருமானை அர்ச்சிக்கசெய்யவேண்டும்.

விசேஷம்—போகத்தால் சிவபெருமானை அர்ச்சிக்க வேண்டுமானல் இரேசக, பூரக, கும்பகமே ஆவசியமாகியதால் பூரகத்தினலேயே அர்ச்சிக்கவேண்டும் விதமாகும் என்ருர்.

6. விளக்குறசிந்தை நயான்மெய்ப்பொருளைக்கண்டு
துளக்கற வர்ச்சிக்கு மாறு.

உரை—விளங்கப்பட்ட மனத்தினுல் உண்மை வஸ்துவைப் பார்த்து குற்றமில்லாமல் அர்ச்சனைசெய்யும் விதமாகும்.

கருத்து—தெளிந்த சிந்தையால் குற்றமின்றி அர்ச்சிக்கவேண்டும்.

விசேஷம்—கற்றல், கேட்டல், சிந்தித்தல் என்னும் மூன்றுந்தெரிந்து நடப்பவர்களே தெளிந்தவராவார்கள்.

7. பிண்டத்தி னுள்ளே பொா திறைவனை
கண்டுதா னர்ச்சிக்கு மாறு.

உரை—சரீரத்தினுள்ளே நீங்காத சர்வேஸ்வரனைக் கண்டு அர்ச்சிக்கும் விதமாகும்.

கருத்து—உள்ளிடத்தில் நீங்காத கடவுளை அர்ச்சிக்க வேண்டியது.

விசேஷம்—சக்கரத்தினுள்ளே கடவுளை யறியலாமேயன்றி பகிர்முகமாக அறிய வியலாதாகும்.

8. மந்திரங்க ளெல்லா மயங்காம லுண்ணினைந்து
முர்த்தானை யர்ச்சிக்கு மாறு.

உரை—எல்லா மந்திரங்களிலும் மயக்கத்தை வையாமல் அகத்தினுள்ளே நினை முன்னதாக சர்வேஸ்வரனை அர்ச்சிக்கும் விதமாகும்.

கருத்து—எந்த மந்திரங்களிலும் மனது மயங்காமல் சரீரத்தினுள்ளே வணங்கவேண்டும்.

விசேஷம்—மந்திரங்களிலில்லாமல் மனத்தால் அர்ச்சிக்கவேண்டும் என்றார்.

9. போக் கருத்திற் பிண்டத்தி னுண்ணினைந்
தாரா தனைசெய்யு மாறு.

உரை—உள்ளிடத்திலிருந்து ஒழியாத எண்ணத்தினால் நினைந்து சிவபெருமானை ஆராதனை செய்யும் விதமாகும்.

கருத்து—அந்தர்முகத்தில் நீங்காத நினைவுடன் ஆராதனை செய்யவேண்டும்.

விசேஷம்—கடவுள் அந்தர்முகத்தில் விளங்கப்பட்டவர், அவரை இடைவிடாது சிந்திக்கவேண்டும் என்றார்.

10. உள்ளத்தி னுள்ளே யுறப்பார்த்தங் கொண்சுடரை
மெள்ளத்தா னர்ச்சிக்கு மாறு.

உரை—பிரகாசமாகிய தேஜோமயவஸ்துவை மனத்தினுள்ளே பொருந்தக்கண்டு அங்கு மெதுவாக அர்ச்சனை செய்யும் விதமாகும்.

கருத்து—சுடர்மயதேவனை அந்தர்முகத்தில் பூஜிக்க வேண்டும்.

விசேஷம்—ஞானச்சுடரே கடவுளும் மோட்சமுமாகும்.

---

9. உள்ளுணர்தல்

1. எண்ணிலி யூழி தவஞ்செய்திங் கீசனை
உண்ணிலைமை பெற்ற துணர்வு.

உரை—கணக்கற்ற அநேககாலங்களாக தபசுசெய்து இவ்விடத்து சர்வேஸ்வரனை மனவலுவால் அடையப்பெற்றது உணர்ச்சியாகும்.

கருத்து—அநேககாலம் இடைவிடாது தவஞ்செய்து சிவனை யடையப்பெற்றது உணர்ச்சியேயாம்.

2. பல்லூழி காலம் பயின்றரனை யர்ச்சித்து
நல்லுணர்வு பெற்ற நலம்.

உரை—பல்காலமாகப் பழகி ஈஸ்வரனை அர்ச்சனை செய்து பெற்ற பயனுவது நல்ல உணர்ச்சியேயாம்.

கருத்து—நெடுங்காலம் தவஞ்செய்து பெற்ற நன்மை உணர்ச்சியினுலாம்.

3. எண்ணற் கரிய வருந்தவத்தா லன்றே
நண்ணப் படுமுணர்வு தான்.

உரை—மனத்தில் நினைப்பதற்கு அருமையான அரிய தவத்தினுல் அடையப்படுவது உணர்வுதான்.

கருத்து—அரிய தவத்தால் அடைவது நல்ல உணர்வேயாம்.

4. முன்னைப் பிறப்பின் முயன்ற தவத்தினல்
பின்னைப் பெறமுணர்வு தான்.

உரை—முன் ஜென்மத்தில் முயற்சிசெய்த தவப்பலனல் பிறகே அடையத்தக்கதானது நல்ல உணர்வேயாகும்.

கருத்து—பூர்வஜென தவசிரேஷ்டத்தினல் இந்த ஜென்மத்தில் நல்ல உணர்ச்சியை யடைவதாகும்.

5. காயக் கிலேச முணர்ந்த பயனன்றே
ஓயா வுணர்வு பேறல்.

உரை—சீரத்தினுடைய சந்தேகத்தை தெரிந்துக் கொண்ட பயனல்லவா ஒழிதலில்லாத உணர்ச்சியைப் பெருவதாகும்.

கருத்து—தேகத்தின் உண்மையைத் தெரிந்துக்கொண்டு தவஞ்செய்வதே நல்லுணர்வு பெறுவதாகும்.

'தன்னையுந்தனக்காதாரந் தலைவனையுங் கண்டாயேல்
பின்னையுந்தலைவன்றானும் பிரமமாய் பிறப்பு தீர்ப்பான்'

என்பதனலறிக

6. பண்டைப் பிறவிப் பயனுந் தவத்தினல்
கண்டங் குணர்வு பேறல்.

உரை—முன்ஜென்மத்தின் பயனுகிய தவத்தினல் இப்போது பார்த்து அங்கு நல்லுணர்வை பெறுவதாகும்.

கருத்து—பூர்வஜென்ம புண்ணியபலன் பயனே இந்த ஜென்மத்தில் நல்லுணர்வை யடையப்பெற்றதாகும்.

7. போரந் தவத்தின் பயனும் பிறப்பின்மை
ஆராய்ந் துணர்வு பேறின்.

உரை—நீங்காத தவத்தின் பயனே ஜென்மமில்லாமையை ஆராய்ந்து உணர்ச்சி பெறுவதாகும்.

கருத்து—ஒழியாத தவப்பயனே நல்லுணர்ச்சியைப் பெறுவதாகும்.

விசேஷம்—போர்தவம் என்பது தவத்தின் விதம் இடைவிடாது செய்யவேண்டும். அவ்வாறு செய்யிற்ருன் நல்லுணர்ச்சி கைகூடும் என்ருர்.

8. ஞானத்தா லாய வுடம்பின் பயன்ன்றே
மோனத்தா லாய வுணர்வு.

உரை—ஞானத்திஞலுண்டானது சரீரத்தின் பிரயோஜனமல்லவா மௌனஞானத்தாலுண்டான நல்லுணர்ச்சியாகும்.

கருத்து—ஞானசரீரத்தின் பயனே மௌனத்தாலுண்டான உணர்வாகும்.

விசேஷம்—ஞானத்தாலுண்டான சரீரம், உள்ளுடம்பேயாம்.

9. ஆதியோ டொன்று மறிவைப் பெறுவதுதான்
நீதியார் செய்த தவம்.

உரை—முதற்பொருளோடு கலந்தியங்கும் உணர்ச்சியைப்பெறுவதே நீதியோடு செய்த தவமாகும்.

கருத்து—நீதியோடு செய்யுந் தவமே நல்லுணர்வாகும்.

10. காடு மலையுங் கருதித் தவஞ்செய்தால்
கூடு முணர்வின் பயன்.

உரை—காட்டிலும் மலையிலுமிருந்து கருதி தவத்தைச்செய்தால் நல்லுணர்வின் பயன் சித்தியாகும்.

கருத்து—காடுகளிலும் மலைகளிலும் தவஞ்செய்வது நல்லுணர்ச்சிக்கு அநுகூலமாகும்.

"கனியேனுமரிய செங்காயேனு முதிர்சருகு
கந்தமூ லங்களேனுங்
கனல்வாதை வந்தெய்தி யள்ளிப்புசித்துநான்
கண்மூடி மௌனியாகி
தனியேயிருப்பதற் கெண்ணினே னெண்ணமிது
சாமிநீ யறியாததோ" என்பதனாலறிக.

---

## 10. பத்தியுடைமை.

1. பத்தியா லுள்ளே பரிந்தரனைத் தானோக்கில்
முத்திக்கு மூல மது

உரை—அன்பினால் மனதில் விரும்பி சிவபெருமானைக் காணில், அப்பார்வையானது மோட்சத்திற்குக் காரணமாகும்.

கருத்து—சிவபெருமானை பக்தியோடு பூசிப்பதே மோட்சத்திற்குக் காரணமாகும்.

2. பாடியு மாடியும் பல்காலும் நேசித்துத்
தேடுஞ் சிவசிந்தை யால்.

உரை—பாடியும், ஆடியும், அநேககாலம் பழகியும் சிவனை நினைக்கும் மனத்துடனே தேடவேண்டும்.

கருத்து—பாடியாடி பக்தியால் பழகவேண்டும்.

விசேஷம்—சிவசிந்தை என்றது; 'அவனருளாலே யவன்றாள்வணங்கி' என்பதனாலறிக.

3. அன்பா லழுது மலறியு மாள்வானை
யென்புருகி யுள்ளே நினை.

உரை—நம்மை யாட்கொண்டருள்புரியும் சிவபெருமானை பக்தியினால் அழுதும் அலறியும் எலும்புகள் உருகும்படி மனத்துள்ளே பூசனைசெய்.

கருத்து—கடவுளை அன்பினால் சிந்திக்கவேண்டும்.

அன்பால் அழுதும் அலறியும் என்றதை;

"அரும்பொனே மணியே யென்னன்பே அன்பான
வறிவே யறிவினூறு
மானந்தவெள்ளமே யென்னென்று பாடினே
னாடினே னாடியாடி
விரும்பியேகூவினே னுளறினே னலறினே
மெய்ச்சிலித் திருகைகூப்பி
விண்மாரியெனவெனிரு கண்மாரி பெய்யவே
வேசற்ற யங்தேனியா
யென்றுநீயன்றுநா னுன்னடிமை யல்லவோ
யாதேனு மறியாவெறுந்
துரும்பனேனெண்ணினுங் கைவிடுதல் நீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்
சத்தநிர்க் குணமான பரதெய்வமேபரம்
சோதியே சுகவாரியே" என்பதினாலறிக.

4. பூசனை செய்து புகழ்ந்து மனங்கூர்ந்து
நேசத்தா லீசனைத் தேடு.

உரை—பூசைசெய்து கொண்டாடி மனம் ஒருமித்து அன்பினால் சர்வேஸ்வரனை உணரவேண்டும்.

கருத்து—பரமசிவனை மனத்தில் ஒருமித்துப் பூசித்து ஆனந்தித்துத் தேடவேண்டும்.

5. கண்ணு லுறப்பார்த்துங் காதலாற் ருேனெக்கில்
உண்ணும் யீச ஞெளி.

உரை—கண்களால் பொருந்தப் பார்த்து விருப்பத்துடன் நோக்கிஞல் சர்வேஸ்வரனுடைய பிரகாசமானது விழுங்கக்கூடியதாக விளங்கும்.

கருத்து—உள்ளபடியே அந்தர்முகமாக தரிசிப்பவர்களுக்கு சிவபெருமானுடைய தேஜோமயமானது தன்னுள் அடக்கி நிற்கும்.

6. நல்லானைப் பூசித்து நாதனென வுருகில்
நில்லாதோ வீச னிலை.

உரை—எல்லோர்க்கும் நல்லவனுகிய சர்வேஸ்வரனைப் பூசைசெய்து, எந்த தலைவனேயென்று மனதில் உருகிஞல், அந்த ஈசனுடைய உண்மை நிலையானது நம்பால் குடிகொண்டிருக்க மாட்டாதோ.

கருத்து—நல்ல மனத்துடன் இளகும்படி பூசிப்பவர்களுக்கே ஈசன் திருவருள் நிலைபெற்றிருக்கும்.

7. அடியார்க் கடியரா யன்புருகித் தம்முள்
படிபோன்றிப் பார்த்துங் கோளல்.

உரை—அடியார்களுக்கு அடியார்களாக பக்தியால் உருகி மனத்தின்கண் உள்ளுலகங்களிற் கலந்து உணர்ந்து அடையவேண்டும்.

கருத்து—அடியார்க்கடியார்போல் மனமுருகி தரிசிக்கவேண்டும்.

விசேஷம்—அடியார்க்கடியராய் என்றது, பக்தியின் விருத்தியை முன்னிட்டு கூறிஞர்

8. ஈசனெனக் கருதி யெல்லா வுயிர்களையும்
நேசத்தால் நீ நினைந்து கொள்

உரை—எல்லா உயிர்களையும் சர்வேஸ்வரனுடைய திருவுருவமெனக்கருதி அன்பினால் பக்தி செய்துக்கொள்ளக் கடவாய்.

கருத்து—சர்வ ஆன்மாக்களும் ஈஸ்வரமயமாகும்.

9. மெய்ம் மயிர்கூர விதிப்புற்று வேர்த்தெழுந்து
பொய்ம்மையி லீசனைப் போற்று.

உரை—சரீரத்தில் மயிர்க்குச்செறிய புளகாங்கிதமாய் வேர்வையுடன் எழுந்து பொய்யில்லாது உண்மையாக விளங்குகின்ற சர்வேஸ்வரனை பூசனைசெய்.

கருத்து—உண்மையான கடவுளை சரீரம் புளகாங்கிதங்கொள்ள வணங்கவேண்டும்.

10. சேர்ந்தறிந் துநாடிச் செவ்விதா யுள்ளே
அறிந்தரனை யாய்ந்து கொளல்.

உரை—சேர்ந்து அறிந்து விரும்பி நன்றாய் மனத்தின்கண்ணே ஆராய்ந்து சர்வேஸ்வரனைத் தேடவேண்டும்.

கருத்து—இறைவனை உண்முகத்தில் நன்றாய் ஆராய்ந்து தரிசிக்கவேண்டும்.

---

## திருவருட்பால்.

### 1. அருள்பெறுதல்.

1. அருளின் றுலன்றி யகத்தறி வில்லை
அருளின் மலம் மறுக்கலாம்.

உரை—சர்வேஸ்வரன் திருவருளில்லாமல் மனத்தின் கண்ணே விளங்கக்கூடிய மற்றோர் அறிவு இல்லை. அத்தகைய அருளினால் மும்மலங்களை வேரறுக்கக்கூடும்.

கருத்து—மலக்குற்றங்களை இறைவன் திருவருளால் அறுத்தொழிக்கலாம்.

மும்மலமாவது:—ஆணவம், காமியம், மாயை.

ஆணவம்—உடம்பை நானென்றிருக்கிறது.

காமியம்—கண்டவைக்கெல்லாம் ஆசைப்படுகை.

மாயை—தனக்கு வருகையறியாமை கோபங்கொண்டிருக்கை.

2. இருளைக் கடிந்தின் றிறைவ னருளால்
தெருளுஞ் சிவசிந்தை யாம்.

உரை—இன்றே அஞ்ஞானமாகிய இருளை அறவொழித்தால் சிவபெருமானுடைய திருவருளால் தெளிவாகி சிவசிந்தனை யுண்டாகும்.

கருத்து—அஞ்ஞானசிந்தை யொழிந்தால் ஞானசிந்தனை யுண்டாகும்.

3. வாய்மையாற் பொய்யா மனத்து மாசற்ற
தூய்மையா மீச னருள்.

உரை—உண்மையாலும், பொய்யில்லா உண்மை மனத்தினாலும், குற்றமற்ற பரிசுத்தத்தினாலும் இறைவன் திருவருள் உண்டாகும்,

கருத்து—உண்மையை கடைப்பிடித் தொழுகுபவர்க்குக் கடவுள் திருவருளுண்டாகும்.

4. ஒவ்வகத்து ணின்ற சிவனருள் பேற்றக்கால்
அவ்வகத்து ளானந்த மாம்.

உரை—பொருந்திய மனத்தின்கண் விளங்கி யிருந்த சிவபெருமானுடைய திருவருளைப் பெற்றால் உள்ளகத்திற்கு ஆனந்தமுண்டாகும்.

கருத்து—மனத்துளிருக்கும் சிவபெருமான் திருவருளைப்பெற்றால் ஆனந்த மனமாகும்.

5. உன்னுங் கரும முடிக்கலா மொள்ளிதாய்
மன்னுமருள் பேற்றக் கால்.

உரை—பிரகாசமுடையதாய் நிலைபெற்றிருக்கின்ற திருவருளை யடையப்பெற்றால் நினைக்கப்பட்ட கருமங்களை யெல்லாம் முடிக்கலாம்.

கருத்து—கடவுள் அருளையடைந்தால் எண்ணிய காரியங்களை நிறைவேற்றலாம்,

6. எல்லாப் பொருளு முடிக்கலா மீசன்றன்
றொல்லையருள் பேற்றக் கால்.

உரை—சர்வேஸ்வரனுடைய பழமையாகிய திருவருளை யடையப்பெற்றால் எல்லாப் பொருள்களையும் நிறைவேற்றலாம்.

கருத்து—இறைவன் திருவருளை யடையப்பெற்றவர்கள் எல்லாம் செய்ய வல்லவர்களாவார்கள்.

7. சிந்தையு ணின்ற சிவனருள் பெற்றக்கால்
பந்தமாம் பாச மறும்.

உரை—மனத்தின்கண் விளங்கும் சிவபெருமானுடைய திருவருளை யடைந்தால் பந்திக்கப்பட்ட மாய்கையானது விலகும்.

கருத்து—உள்ளமனத்து இறைவனருள்பெற்றால் எல்லா மாயைகளையும் அறுத்தொழிக்கலாம்.

8. மாசற்ற கோள்கை மதிபோலத் தான்றோன்று
ஈசனருள் பெற்றக் கால்.

உரை—ஈஸ்வரனுடைய திருவருளை யடையப்பெற்றால் குற்றமற்ற தன்மையானது சந்திரனொளியைப்போல தோன்றும்.

கருத்து—இறைவன் திருவருளை யடைந்தால் நல்லுணர்வு பரிசுத்தமாயிருக்கும்.

9. ஆவாவென் றோதி யருள்பெற்றார்க் கல்லாது
தாவாதோ ஞான வொளி.

உரை—ஆ ஆ என்று சொல்லி இறைவன் திருவருளைப் பெற்றவர்களுக்கல்லாமல் ஞானப்பிரகாசமானது சித்தியாகாதோ.

கருத்து—திருவருளை யடைந்தவருக்கு ஞானவொளி கைகூடும்.

10. ஓவாச் சிவனருள் பெற்ற லுரையின்றித்
தாவாத வின்பந் தரும்.

உரை—ஒழியாத சிவபெருமானுடைய திருவருளை யடையப்பெற்றால் சொல்லின்றி நீங்காத சுகானந்தத்தைக் கொடுக்கும்.

கருத்து—பிரியாத அருளைப்பெற்றால் பிரியாத சிவஞான முண்டாகும்.

---

2. நினைப்புறுதல்.

1. கருத்துறப் பார்த்துக் கலங்காம லுள்ளத்
திருத்திச் சிவனை நினை.

உரை—மனதில் பொருந்தும்படிப் பார்த்து கலங்காமல் சிவபெருமானை உள்ளத்துள் வைத்து நினைப்பாயாக.

கருத்து—மனதில் உறுதியாக அமைத்து சிவபெருமானை சிந்திக்கவேண்டும்.

2. குண்டலியி னுள்ளே குறித்தரனை சிந்தித்து
மண்டலங்கள் மேலாகப் பார்.

உரை—குண்டலி சத்தியினுள்ளே நினைவை நினைத்து அங்கு சர்வேஸ்வரனை சிந்தித்து மும்மண்டலங்களையும் உயர்வாகப்பார்த்து தரிசிப்பாயாக.

கருத்து—மூலாதார குண்டலிசத்தியைக் குறித்து மும்மண்டலங்களையும் தரிசிக்கவேண்டும்.

3. ஓர்மின்கள்சிந்தையி லோன்றச்சிவன்றன்னைப்
பார்மின் பழம்பொருளே யாம்.

உரை—சிவபெருமானை சிந்தையில் பொருந்த நினையுங்கள்; தரிசனம் செய்யுங்கள்; இப்படி செய்யில் பழம்பொருளாகிய கடவுளாகக்கூடும்.

கருத்து—சிவனை உள்ளத்தில் நினைந்து தரிசித்தால் கடவுளாகலாம்.

4. சிக்கெனத் தேர்ந்துகொள் சிந்தையி லீசனை
மிக்க மலத்தை விடு.

உரை—சர்வேஸ்வரனை மனத்தின்கண் பலம்பொருந்த தெரிந்துக்கொள். அவ்வாறு செய்யில் மிகுந்த மாயா சம்பந்தமான மும்மலங்களையும் அகற்றிவிடுவாயாக.

கருத்து—பரமேஸ்வரனை சிந்தித்தால் மும்மலங்களும் விலகி பரிசுத்தனுகலாம்.

5. அறுமின்கள் சிந்தையி லாதாரத் தைச்சேர்ந்
துறுமின்க ளும்முளே யோர்ந்து.

உரை—ஆராதாரங்களைச் சேர்ந்து மனத்தின் கண்ணே தெரியுங்கள். உமக்குள்ளே நன்கு ஆராய்ந்து சிவபெருமானை அடையுங்கள்.

கருத்து—ஆராதாரத்தைக்கொண்டு சிவபெருமானைத் தெரிந்து அவனருளை யடையுங்கள்.

6. நித்தம் நினைந்திரங்கி நின்மலனை யொன்றுவிக்
முற்று மவனொளியே யாம். [கில்

உரை—அநுதினமும் மலரகிதனுகிய சிவபெருமானை மனமிரங்கிச் சிந்தித்து பொருந்தச்செய்தால், முழுதும் அந்த சிவபெருமானுடைய தேஜோமயமேயாகும்.

கருத்து—எப்போதும் நின்மலனுகிய பரமேஸ்வரனைச் சிந்தித்தால் எல்லாம் சிவப்பிரகாசமேயாகும்.

விசேஷம்—ஏகபோகமாய், நீயும் நானுமாய் என்பதாகும்.

7. ஓசை யுணர்ந்தங்கே யுணர்வைப் பெறும்பரிசால்
ஈசன் கருத்தா யிரு.

உரை—சத்தத்தை யறிந்து உண்முகத்திலே உணர்ச்சியைப்பெற்ற தன்மையால் பரமேஸ்வரனுடைய நினைவாகவே இருப்பாயாக.

கருத்து—சத்தத்தை யறிந்து அந்தர்முகத்திலே சதா சர்வேஸ்வரன் சிந்தனையாகவேயிரு.

8. இராப்பக லன்றி யிருசுடர்ச் சிந்திக்கில்
பராபரத்தோ டோன்றலு மாம்.

உரை—இரவுபகலில்லாமல் சதாநேரமும் சந்திர சூரி யாக்கினிகளாகிய முச்சுடர்களை சிந்திக்கில் பராபர வஸ்துவினிடத்தில் பொருந்தக்கூடும்.

கருத்து—சதாநேரமும் அகத்தீச இருசுடரை சிந்தித்தால் அச்சிவபெருமானோடு கலந்திருக்கலாம்.

9. மிக்க மனத்தால் மிகநினைந்து சிந்திக்கில்
ஒக்கச் சிவனுருவ மாம்.

உரை—உயர்வாகிய மனத்தால் அதிகமாக நினைந்து தியானம்செய்தால் ஒப்பற்ற சிவசொரூபத்தை யடையலாம்.

கருத்து—நல்ல மனத்தால் உள்ளபடியே சிந்திக்கில் சிவசொரூபத்தை யடையலாம்.

10. வேண்டுவார் வேண்டும் வகைதான் விரிந்தெங்கும்
காண்டற் கரிதாஞ் சிவம்.

உரை—வேண்டுவோர்கள் விரும்புகின்ற வகையாகப் பரவி எவ்விடத்திலும் சிவபெருமானைக் காணுதற்கு அரிய பொருளாகும்.

கருத்து—எங்கும் பரவி நிற்கும் பராபரவஸ்துவைக் காண்பதற்கு அருமையாகும்.

---

## 3. தெரிந்து தெளிதல்.

1. தேறித் தெளிமின் சிவமொன்றே யுள்ளுணர்
கூறிய பல்குணமு மாம். [வில்

உரை—உள்ளுணர்ச்சியில் சிவபெருமான் என்னும் வஸ்துவை சொல்லும் பல குணங்களிலும் கலந்துள்ள தென்று ஆராய்ந்து தெளிவடையுங்கள்.

கருத்து—சிவபெருமான் பல குணங்களிலும் கலந்து விளங்கப்பட்டதென்று தெளிவாயாக.

2. உண்டிலை யென்று முணர்வை யறிந்தக்கால்
கண்டில்லை யாதுஞ் சிவம்.

உரை—உண்டென்றும் இல்லையென்றும் சொல்லும் படியான உணர்ச்சியை அறிந்தால் சிவமென்னும் வஸ்து வானது கண்டும் காணாதுமான பொருளாகும்.

கருத்து—இரண்டெனும் பொருளை உணர்ந்தக்கால் சிவமும் அவ்வாறே விளங்கும்

3. ஒருவர்க் கொருவனே யாதுமுயிர்க் கெல்லாம்
ஒருவனே பல்குணமு மாம்.

உரை—ஒருவருக்கொருவனா யிருக்கின்ற சிவபெருமான் சர்வ ஆன்மாக்களுக்கெல்லாம் பல குணங்களிலும் கலந்த பொருளாகும்.

கருத்து—பல குணங்களுடைய ஆன்மாக்களுக்கெல்லாம் ஒப்பற்ற சிவம் ஒன்றே ஆதாரமாக இருக்கப்பட்டது.

4. எல்லார்க்கு மொன்றே சிவமாவ தென்றுணர்
பல்லோர்க்கு முண்டோ பவம். [ந்த

உரை—சர்வ ஆன்மாக்களுக்கும் சிவம் ஒன்றே பொதுவாக இருப்பதென்று உணர்ந்த சகலருக்கும் பிறவி அடையுமோ? அடையாது.

கருத்து—ஈஸ்வரன் சர்வ வியாபி என்று அறியவல்லார்க்கு இனி மறுஜென்மமில்லை.

5. ஆயு மிரவியு மொன்றே யனைத்துயிர்க்கும்
ஆயுங்கா லொன்றே சிவம்.

உரை—ஆராயும் சர்வ பிராணிகளுக்கும் சூரியன் ஒரு பொருளேயாகும். அதுபோல ஆராய்ந்து பார்த்தால் சர்வான்மாக்களுக்கும் சூரியன் ஒருவனே போன்று சிவமும் ஒன்றேயாகும்.

கருத்து—சர்வான்மாக்களுக்கு சூரியன் ஒருவனே போன்று சிவமும் ஒன்றேயாகும்.

6. ஓவாத தென்றே பலவா முயிர்க்கெல்லாந்
தேவான தென்றே தெளி.

உரை—என்றும் ஒழியாதிருக்கும் ஒப்பற்ற பொருளே பலவகைப்பட்ட ஆன்மாக்களுக்கெல்லாம் தெய்வமாயிருப்பதென்று தெளிவடைவாயாக.

கருத்து—என்றும் அழியாத ஒருபொருளே சர்வான்மாக்களுக்கெல்லாம் பிரதானமானது.

7. தம்மை யறியாதார் தாமறிவோ மென்டதென்
செம்மையா லீசன் றிறம்.

உரை—தம்மைத்தாமே யறிவதற்குச் சக்தியில்லாத அறிவிலிகள் சர்வேஸ்வரனுடைய வல்லமையை உண்மையாக தாம் அறிவோமென்பது என்?

கருத்து—தன் இலக்கணத்தை யறியாதவன் ஈஸ்வரன் இலட்சணத்தை யறியமாட்டான்.

8. எல்லா வுலகத் திருந்தாலு மேத்துவர்கள்
நல்லுலக நாத னடி.

உரை—எல்லா லோகங்களி லிருந்தாலும் நல்ல உலகத்திற்குக் காரணமாகிய இறைவனது திருவடிகளை வணங்குவார்கள்.

கருத்து—ஞானிகள் எவ்வுலகத்தி லிருந்திடினும் கடவுள் திருவடிகளை யாவரும் துதிசெய்வார்கள்.

9. உலகத்திற் பட்ட வுயிர்க்கெல்லா மீசன்
நிலவுபோ னிற்கும் நிறைந்து.

உரை—உலகங்களி லிருக்கின்ற ஆன்மாக்களுக்கெல்லாம் சர்வேஸ்வரன் வியாபகமாகி பூரணச்சந்திரனைப்போ லிருப்பன்.

கருத்து—சர்வேஸ்வரன் சர்வான்மாக்களிடத்தும் வியாபித்திருக்கப்பட்டவன்.

10. உலகத்தில் மன்னு முயிர்க்கெல்லா மீசன்
அலகிறந்த வாதியே யாம்.

உரை—உலகின்கண் நிலைபெற்றிருக்கின்ற சர்வான்மாக்களுக்கும் சர்வேஸ்வரனுன அளவுசொல்லக்கூட ஆதி வஸ்துவேயாம்.

கருத்து—உலகத்திலுள்ள சகல உயிர்களுக்கும் சிவபெருமானே முதற்பொருளாகும்.

---

4. கலைஞானம்.

**1. சத்தியாஞ் சந்திரனைச் செங்கதிரோ னூடுருவில்
முத்திக்கு மூல மது.**

உரை—பெண்ரூபமாகிய சந்திரனை ஆண்ரூப்மாகிய சூரியன் ஊடுருவிக்கலந்தால், அந்த மார்க்கமானது மோட்சத்திற்குக் காரணமாகும்.

கருத்து—சந்திரகலையும் சூரியகலையும் ஒன்றுகூடுவதே சுழிமுனை மோட்சவழிக்குக் காரணமாகும்.

விசேஷம்—சந்திரகலையும் சூரியகலையும் ஒன்றுககலந்தால் சுழிமுனையாகும். சுழிமுனையில் கும்பித்தால் சர்வேஸ்வரனுடைய சொரூபம் பிரகாசிக்கும். அந்த சிவசொரூபமே மோட்சமாகும்

**2. அயனங்கோள் சந்திரனு லாதித்தனேன்றில்
நயனமா முந்திக்கு வீடு.**

உரை—தட்சிணாயனம் உத்திராயணமென்று சொல்லப்பட்ட இரண்டு பிரிவைக்கொண்டிருக்கின்ற சந்திரகலையுடன் சூரியகலை பொருந்தி கூடினால் மோட்சவீட்டைக் காணும் ஞானக்கண்ணாகும்.

கருத்து—இருகலையும் ஒன்றாயியங்கினால் சுழிமுனையென்னும் ஞானக்கண்ணே மோசட்சவீட்டை யடையக் காரணமாகும்

நயனமேன்பது:—கண், மூக்கண், ஞானக்கண், அறிவு.

**3. அஞ்சாலு மாயா தறம்போகு ளின்பமுந்
துஞ்சாதவர் துறக்கு மாறு.**

உரை—பஞ்ச அவஸ்தைகளாலும் ஒழியாத தருமமும், பொருளும், இன்பமும் இறவாமலிருப்பவர்கள் விட்டுவிடும் மார்க்கமாகும்.

கருத்து—வீடு நீங்க மற்ற மூன்று புருஷார்த்தங்களேயும் பிறவி யொழிந்தவர்கள் விடக்கூடியவைகளாகும்.

பஞ்ச அவஸ்தைகளாவன:—சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்.

1. சாக்கிரம்—லலாடத்தானம்.
2. சொப்பனம்—கண்டத்தானம்.
3. சுழுத்தி—இருதயகமலம்.
4. துரியம்—நாபிச்கமலம்.
5. துரியாதீதம்—குறியிடம்.

4. ஈசனே டோன்றி லிசையாய் பொருளில்லே
தேசவிளக் கோளியே யாம்.

உரை—சர்வேஸ்வரனேடு கூடிவிட்டால் இனி கைகூடாத பொருள் ஒன்றுமில்லேயாம். ஏனெனில் அப்பொருளானது உலக விளக்குகளுக்கு பிரகாசத்தைக் கொடுப்பதாகும்

கருத்து—இறைவன் தேசங்களுக்கெல்லாம் பிரகாசமா யிருப்பதால் அவனேடு ஒன்று கலந்து ஏகரூபமானவர்களுக்கு எல்லாப்பொருளும் கைகூடும்.

5. தாஞ்செய்வினேயெல்லாந் தம்மையறவுணரில்
காஞ்சனமே யாகுங் கருத்து.

உரை—தம்மை முழுதும் பற்றற உணர்ந்துக்கொண்டால், தம்மால் செய்யப்பட்ட வினேசம்பந்தங்களெல்லாம் ஒழிந்து மனமானது பொன்போலாகும்.

கருத்து—தன்னைத்தான் அறிந்தவர்கள் எப்படிப் பட்ட வினைகளை செய்திருப்பினும் அவையெல்லாம் ஒழிந்து கலங்கமற்ற பொன்போன்ற மனத்தை யுடையராவார்கள்.

**6. கூடக மான குறியெழுத்தைத் தானறியில்**
**வீடக மாகும் விரைந்து.**

உரை—சரீரமுண்டாகிய அறிகுறியா யிருக்கின்ற எழுத்தை அறிவால் அறிந்தால் சீக்கிரமாக மோட்சவீட்டை யடையும்.

கருத்து—சரீரமெடுத்தற்குக் காரணமான அடையாள அட்சரத்தையுணர்ந்திடில் மோட்சவீட்டைக் கொடுக்கும்.

**7. வீடக மாக விழைந்தோல்லை வேண்டுமேல்**
**கூடகத்திற் சோதியோ டொன்று.**

உரை—மோட்சமடைய ஆசைப்பட்டு சீக்கிரமாக விரும்புவார்களானல்கூடப் பிரமத்தினுடன் கலந்திடுவாயாக.

கருத்து—மோட்சமடைய விரும்புவோர்கள் கூடப் பிரமத்தினுடன் கலந்திடவேண்டும்.

**8. பூரித்து நின்ற சிவனைப் புணரவே**
**பாரித்த தாகுங் கருத்து.**

உரை—எங்கும் வியாபகமான சிவபெருமானோடு கூடினல் மனம் பெருமை யுடையதாகும்.

கருத்து—எங்கும் வியாபித்திருக்கும் இறைவனுடன் கலந்தால் மனமானது பரிசுத்த முடையதாகும்.

**9. இரேசக மாற்றி யிடையரு தேகிற்கில்**
**பூரிப்ப துள்ளே சிவம்.**

உரை—இரேசகத்தைச்செய்து இடையில் விடாம லிருந்தால் சிவபெருமான் உள்ளே நிறைந்து விளங்கப் பட்டவனுவான்.

கருத்து—கிரமப்படி இரேசகத்தைச்செய்யில் பூரகத் தில் சிவன் உள்ளே நிறைந்திருப்பவனுவான்.

**10. சிந்தையில் நின்ற நிலவிசும்பிற் சாக்கிரமாம்**
**சந்திரனிற் றேன்று முணர்வு.**

உரை—மனதில் உண்டாகிய உண்மையினுல் ஆகா யத்தில் ஜாக்ராவஸ்தையாகும். அவ்வுணர்ச்சியானது சந் திரகலையில் வெளிப்படும்.

கருத்து—மனநிலை யுண்மையானது சாக்கிராவஸ்தை யில் சந்திரகலையில் உணர்ச்சிரூபமாகத் தோன்றும்.

---

5. உருவோன்றி நிற்றல்.

**1. எள்ளகத் தெண்ணே யிருந்ததனை யொக்குமே**
**உள்ளகத் தீச னொளி.**

உரை—மனதிலிருக்கும் சர்வேஸ்வரனுடைய பிர காசமானது எள்ளினிடத்து எண்ணெய் வியாபித்திருப்ப தற் கொப்பாகும்.

கருத்து—எள்ளுக்குளெண்ணெய் கலந்திருப்பது போ ன்று சர்வேஸ்வரன் எல்லா உயிர்களிடத்தும் வியாபித் திருப்பன்.

**2. பாலின்க ணெய்போற் பரந்தெங்கு நிற்குமே**
**நூலின்க ணீச னுழைந்து.**

உரை—சர்வேஸ்வரனானவன் நூலின்கண்ணே கலந்து நுழைந்து, பாலின்கண் நெய்போல எங்கும் பரவியிருப்பான்.

கருத்து—பாலினுள் நெய் கலந்திருப்பது போன்று சர்வேஸ்வரன் எல்லா ஆன்மாக்களிடத்தும் கலந்திருப்பானாகும்.

விசேடம்—நூல் என்பது சரநூலென்றும் சுவாசமென்றும் சொல்லப்படும்.

3. கரும்பினிற் கட்டியுங் காய்பாலி னெய்யும்
இரும்புண்ட நீரு மியல்பு.

உரை—கரும்பினிடத்து வெல்லமும், காயும் பாலினிடத்து நெய்யும், இரும்பினால் உண்ணப்பட்ட ஜலமும் இறைவனுடைய இலட்சணங்களாகும்.

கருத்து—சர்வேஸ்வரனுடைய லட்சணங்கள் கரும்பு, பால், இரும்பு முதலியவைகளிலிருக்கும் தன்மையொத்ததாகும்.

4. பழத்தி னிரதம்போற் பரந்தெங்கு நிற்கும்
வழுத்தினு லீச னிலை.

உரை—சர்வேஸ்வரனுடைய உண்மை நிலையை துதிசெய்யுங்கால் பழத்தினுடைய இரசத்தைப்போல் எங்கும் வியாபித்திருக்கும்.

கருத்து—இறைவன் வியாபகமானது பழத்தினுள் இரசத்தைப்போல் சர்வான்மாக்களிடத்தும் பொருந்தி நிறைந்திருக்கும்.

5. தனுவோடு தோன்றுமே தானெல்லா மாகி
யணுவதுவாய் நிற்கு மது.

உரை—தானே எல்லாப் பொருள்களாகியும் அணு ரூபமாயும் நிற்கும். அப்பொருளானது இந்த தேகத்துடனேயே யுண்டாகும்.

கருத்து—எல்லாப்பொருள்களாகியும், அணுவாகியும், நிற்கும் பொருளானது இந்த தேகத்துடனேயே உற்பத்தியாகும்.

6. வித்து முளைபோல விரிந்தெங்கு நிற்குமே
ஒத்துளே நிற்கு முணர்வு.

உரை—மனதினுள்ளே ஒத்து விளங்கும் உணர்ச்சியானது, விதையையும் முளையையும்போல் எங்கும் விரிந்து கலந்து நிற்கும்.

கருத்து—சர்வேஸ்வரன் சகல உயிர்களிலும் வித்தும் முளையும்போல் கலந்திருப்பான்.

7. அச்ச மாங்கார மகத்தடக்கி னற்பின்னை
நிச்சயமா மீச நிலை.

உரை—பயத்தையும் அகங்காரத்தையும் மனதினில் அடக்கினால் பிறகு தலைவனுடைய உண்மை நிலையானது உண்மையாக விளங்கும்.

கருத்து—பயத்தையும் அகங்காரத்தையும் அடக்கினவர்களுக்கே ஈஸ்வரனுடைய குணம் நன்கு விளங்கும்.

8. மோட்டினீர் நாற்ற முளைமுட்டை போலுமே
வீட்டுளே நிற்கு மியல்பு.

உரை—நமது சரீரத்திற்குள்ளிருக்கும் இயல்பானது, மோட்டிலே நீர் நாற்றத்தையுடைய முளை முளைக்கின்ற எருமுட்டை போலுமாம்.

கருத்து—சரீரத்திற்குள்ளிருக்கும் தன்மையானது நீர் நாற்றமுடைய எருமுட்டைபோலாம்.

9. நினைப்பவர்க்கு நெஞ்சத்துள் நின்மலனாய் நிற்
அனைத்துயிர்க்குந் தானா மவன். [கும்

உரை—எல்லா உயிர்களுக்கும் ஒருவனா யிருக்கின்ற சர்வேஸ்வரன், தன்னை உண்மையாக நினைக்கப்பட்டவர்களுடைய மனதினுள்ளே பரிசுத்தனாக இருப்பான்.

கருத்து—சர்வேஸ்வரன் தன்னை உண்மையாக சிந்திப்பவர்கள் இருதயகமலத்தில் பரிசுத்தனாக விளங்குவான்.

10. ஓசையி னுள்ளே யுதிக்கின்ற தொன்றுண்டு
வாசமலர் நாற்றம்போல் வந்து.

உரை—வாசனை பொருந்திய மலரின் சுகந்தத்தைப் போன்று வந்து சத்தத்தினுள்ளே தோன்றுவது ஒரு வஸ்து உண்டு.

கருத்து—சத்தத்தினுள்ளே பூவின் மணம்போலவந்து தோன்றும் பொருள் ஒன்றுளது.

---

## 6. முத்திகாண்டல்.

1. மனத்தோ டுறுபுத்தி யாங்காரஞ் சித்தம்
அனைத்தினு மில்லை யது.

உரை—மோட்சமானது மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் நான்கினுள்ளும் இல்லை.

கருத்து—கரணம் நாலினு மோட்சமில்லை.

2. வாக்குங் கருத்து மயங்குஞ் சமயங்கள்
ஆக்கினு நூலினு மில்.

உரை—வாக்கும் மனமும் மயங்குகின்ற சமயங்களை உண்டாக்கின சாஸ்திரங்களிலுமில்லை.

கருத்து—எந்த நூல்களிலும் வசனமும் எண்ணமும் மயங்குகின்ற காலம் கூறவில்லை.

3. உருவமொன் றில்லை யுணர்வில்லை யோதும்
அருவமுந் தானதுவே யாம்.

உரை—ஒரு உருவமுமில்லை; உணர்ச்சியுமில்லை; சொல்லப்பட்ட அருவப்பொருளும் அதுவேயாகும்.

கருத்து—ரூபமும் உணர்வும் இல்லாதது அருவமேயாம். அதை யறிவதே மோட்சங் காண்டலாகும்.

4 தனக்கோ ருருவில்லை தானெங்கு மாகி
மனத்தகமாய் நிற்கு மது.

உரை—அந்த வஸ்துக்கு ஓர் ஒருவமுமில்லை. தான் எவ்விடத்தும் வியாபகமாகி மனதுக்குள்ளே கலந்து நிற்கும்.

கருத்து—இறைவன் எங்கும் வியாபகமாகி அன்பர்கள் மனத்துள்ளே உறவாய் நிலைபெற்றிருப்பன்.

5. பெண்ணு ணலியென்னும் பேரொன் றிலதாகி
விண்ணாகி நிற்கும் வியப்பு.

உரை—அப்பொருளினுடைய தன்மையானது பெண் என்றும் ஆண் என்றும் அலி என்றும் வழங்குகின்றபேர் ஒன்றேனும் இல்லாததாய் ஆகாயமாயிருக்கும்.

கருத்து—இறைவன் பெண், ஆண், அலியென்ற நாமமின்றி ஆகாயமாயிருப்பான்.

6. அனைத்துருவ மாய வறிவை யகலில்
தினைத்துணையு மில்லை சிவம்.

உரை—எல்லா உருவங்களுமாகின்ற அறிவை விட்டால் சிவமானது தினையளவு மில்லையாகும்.

கருத்து—ரூபங்க ளெல்லாவற்றையு மடையும் அறிவைவிட்டால் சிவமில்லை.

விசேஷம்—

"அறிவுசிவமென் றிரண்டென்பரறிவிலாதார்
அறிவுசிவமென் றுருமறிகிலர்
அறிவுசிவமென் றுருமறிந்தபின்
அறிவேசிவமதா யமர்ந்திருப்பானே" என்பதனாலறிக.

7. துணிமுகத்துக் காதியாத் துன்னறி வின்றி
அணிதா ரிரண்டு விரல்.

உரை—வருந்துகின்ற முகத்துக்கு முதன்மையாக நெருங்கிய அறிவின்றி அணிதாரா யிருப்பது இரண்டு விரலாகும்.

கருத்து—முகத்திற்கு அறிவின்றி அணிதாரா யிருப்பது இரண்டுவிரல்

8. மயிர்முனையிற் பாதி மனத்தறி வுண்டேல்
அயிர்ப்புண்டங் காதி நிலை.

உரை—ஒரு மயிர்முனையில் பாதியளவு மனத்தினிடததில் அன்பு இருக்குமாகில் அவ்விடத்தில் ஆதிவஸ்துவின் உண்மை நிலையானது அயிர்ப்புண்டாகும்.

கருத்து—மயிர்முனையிற் பாதியளவு அன்பிருக்கில் முத்தி சித்தியாகும்.

9. தற்பர மான சதாசிவத்தோ டோன்றில்
உற்றறி வில்லை யுயிர்க்கு.

உரை—ஞானபரமாகிய சதாசிவத்துடன் கலந்தால் ஆன்மாவுக்கு பொருந்திய அறிவு இல்லையாம்.

கருத்து—எப்போதும் சிவத்தோடு கலந்திருந்தால் அறிவுக்கு பொருந்திய சொந்த அறிவு இல்லையாகும்.

10. உறக்க முணர்வு பசிகெடப் பட்டால்
பிறக்கவும் வேண்டா பிறப்பு.

உரை—தூக்கமும் உணர்ச்சியும் பசியும் கெடப்பட்டால் ஜென்மங்களில் பிறக்கவேண்டியதில்லை.

கருத்து—நித்திரை முதலியவை கேடுண்டால் இனி பிறவி இல்லாததாகும்.

---

## 7. உருபாதீதம்.

1. கருவின்றி வீடாங் கருத்துற வேண்டில்
உருவின்றி நிற்கு முணர்வு.

உரை—மறுபிறவியாகிய கருவில்லாமல் மனஞ் சம்மதிக்குமானால் உணர்ச்சியானது உருவில்லாமல் அரூபமாக விருக்கும்.

கருத்து—பிறவியைக் கருதாமல் மோட்சமடைய விரும்பினால் உணர்வானது உருவில்லாமல் நிற்கும்.

2. பிறத்தலோன் றின்றிப் பிறவாமை வேண்டில்
அறுத்துருவ மாற்றி யிரு.

உரை—பிறந்தலொன்றில்லாமல் பிறவா—நெறியை வேண்டினால் ரூபத்தை யறுத்து வேறுபடுத்தி யிருப்பாய்.

கருத்து—ஜென்மவினைதனை யொழிக்கவேண்டுமானால் பத்தி வேறுபடுத்தி யிருக்கவேண்டும்.

3. உருவங்க ளெல்லா மறுத்தற மாற்றில்
கருவேது மில்லை தனக்கு.

உரை—உருவங்களெல்லாம் நீக்கி முழுமையும் மாற்றினால் உயிருக்கு எந்த ஜென்மமுமிராது.

கருத்து—ரூபங்களை யொழித்தால் பிறகு பிறப்பில்லை.

4. கறுப்பு வெளுப்பு சிவப்புற பொன்பச்சை
யறுத்துறவ மாற்றி யிரு.

உரை—கறுப்பு, வெளுப்பு, சிவப்பு, மஞ்சள், பச்சை என்னும் ரூபங்களை நீக்கி வேறு சிவசொரூபத்தை பெற்றிரு.

கருத்து—வர்ணபேதங்களை நீக்கி வேறு சிவபேதத்தை யடையவேண்டும்.

5. அனைத்துருவ மெல்லா மறக்கெடுத்து நின்றால்
பினைப்பிறப் பில்லையாம் வீடு.

உரை—சகல உருவங்களையெல்லாம் முழுமையுங் கெடுத்திருந்தால் பிறகு ஜென்ம மேற்படுவதில்லை மோட்சமுண்டாகும்.

கருத்து—சகல உருவங்களை அறவே யொழித்தால் மோட்சமுண்டாகும்.

5. நினைப்பு மறப்புற்ற நிராகரித்து நின்றால்
தனக்கொன்று மில்லை பிறப்பு.

உரை—நினைப்பும் மறப்பும் நீங்கி நிராகரித்திருந்தால் தனக்கு ஒரு பிறப்பும் இல்லை.

கருத்து—நினைவு மறப்பு அற்றவர்கட்கு பிறவியில்லை.

7. குறித்துருவ மெல்லாங் குறைவின்றி மாற்றில்
மறித்துப் பிறப்பில்லை வீடு.

உரை—கூறும்படியான ரூபங்களையெல்லாம் யாதொரு குறைவுமில்லாமல் வேறுபடுத்தினால் இறந்து மறு ஜென்ம மடைவதில்லை மோட்சமுண்டாகும்.

கருத்து—ரூபங்களை மாற்றினால் பிறவியின்றி மோட்சமுண்டாகும்.

8. பிதற்று முணர்வை யறுத்துப் பிரபஞ்ச
விகற்ப முணர்வதே வீடு.

உரை—பிதற்றும்படியான உணர்ச்சியை யொழித்து உலகபேதத்தை அறிந்துகொள்வதே மோட்சமாகும்.

கருத்து—ஆபாச உணர்ச்சியை நீக்கி உலகவின்பத்தை யறிவதே மோட்சமாகும்.

9. பிறப்பறுக்க வீடாம் பெருவ‍மை யின்றி
அறுத்துருவ மாற்றி யிரு.

உரை—பெரிய ஒப்புவமை யில்லாமற்படி சகல உருவங்களையுமகற்றி மாறுதல் செய்திருந்தால் வரும் ஜென்மத்தை யொழிக்கும்படியான மோட்சமுண்டாகும்.

கருத்து—சர்வ உருவங்களையும் நீக்கி மாறுதல் செய்திருந்தால் பிறவியின்றி மோட்சத்தைக் கொடுக்கும்.

10. ஓசை யுணர்வோ டுயிர்ப்பின்மை யற்றக்கால்
பேசவும் வேண்டா பிறப்பு.

உரை—ஓசையையும், உணர்ச்சியையும், பெருமூச்சில்லாமையையும் ஒழித்தால் ஜென்மமுண்டென்று பேசவேண்டியதேயில்லை.

கருத்து—ஓசை முதலியவைகள் அற்றக்கால் பிறப்பென்பது இல்லையாம்.

---

8. பிறப்பறுதல்.

1. தன்னை யறிவு மறிவுதனைப் பேறில்
பின்னைப் பிறப்பில்லை வீடு.

உரை—தன்னைத்தானே யறிகின்ற உணர்ச்சியைப் பெற்றால் பிறகு பிறவி யெடுப்பதில்லை மோட்சமுண்டாகும்.

கருத்து—தன்னைத்தானறிந்தால் மோட்சமுண்டாகும்.

2. அறம்பாவ மாயு மறிவுதனைக் கண்டால்
பிறந்துழல வேண்டா பெயர்ந்து.

உரை—தருமத்தையும் பாவத்தையும் ஆராயும்படியான உணர்ச்சியைத் தெரிந்தால் பலதடவை ஜென்மித்து உழலவேண்டியதில்லை.

கருத்து—புண்யபாவங்களை யுணர்ந்தவர்கள் பிறந்துழல வேண்டியதில்லை.

3. சிவனுருவந் தானாய்ச் சேறிந்தடங்கி நிற்கில்
பவநாச மாகும் பரிந்து

உரை—சிவபெருமானுடைய சொரூபமே தன்னுடைய ரூபமாககலந்து அடங்கியிருந்தால் விரும்பியபாவம் நாசமாகி பிறப்பறும்.

கருத்து—தானே சிவசொரூபமானால் பிறவி யில்லையாகும்.

4. உறக்க முணர்வோ யேர்ப்பின்மை யற்ருல்
பிறப்பின்றி வீடாம் பரம்.

உரை—நித்திரையும், உணர்ச்சியும், பெருமூச்சில்லாமையும் நீங்கினுல் பிறவியில்லாமல் உயர்வாகிய மோட்சமுண்டாகும்.

கருத்து—நித்திரை முதலியவைகளை யொழித்தவர்கட்கு ஜெனனமின்றி மோட்சமுண்டாகும்.

5. நினைப்பு மறப்பு நேமேம்பசியு மற்ருல்
அனைத்துலகும் வீடா மது.

உரை—நினைத்தலும், மறத்தலும், பசியும் அற்றக்கால் எல்லா உலகங்களும் மோட்சவீடாகும்.

கருத்து—நினைவு மறதி பசியற்ருல் தோற்றமான விடமெல்லாம் மோட்சவீடாகும்.

6. உடம்பிரண்டுங் கேட்டா லுறபய ஞென்றுண்டு
திடர்படு மீசன் றிறம்

உரை—ஸ்தூல சூக்கும சரீரமிரண்டுங் கெட்டால் வரும்படியான பிரயோஜன மொன்றுண்டு. அதாவது சர்வேஸ்வரனுடைய வல்லமை திடமுண்டாகும்.

கருத்து—இரண்டு சரீரங்களுங்கெட்டால் இறைவனருள் உண்டாகும்.

7. தன்னை யறிந்து செறிந்தடங்கித் தானற்ருல்
பின்னைப் பிறப்பில்லை வீடு.

உரை—தன்னைத்தானறிந்து நின்றடங்கி தானென்றும் அகங்காரத்தை நீக்கினுல் பிறகு ஜென்மமில்லாமல் மோட்சமுண்டாகும்.

கருத்து—தன்னை பதிபவனுக்கு பிறப்பின்றி மோட்ச முண்டாகும்.

8. மருளன்றி மாசறக்கின் மாதுவெளியாய்
இருளின்றி நிற்கு மிடம்.

உரை—மயக்கமின்றி குற்றங்களைக்களைந்தால் மகத்துவ பிரகாசமயமாய் அஞ்ஞானமில்லாமல் இருக்கும் இடமாகும்.

கருத்து—மாயாசம்பந்தத்தை யொழித்தால் மோட்ச நில முண்டாகும்.

9. விகாரங் கெடமாற்றி மெய்யுணர்வு கண்டால் ;
அகாரமாங் கண்டீ ரறிவு.

உரை—மனோவிகாரங்கள் ஒழியும்படியாக மாற்றி உண்மையாகிய உணர்ச்சியைப்பார்த்தால் அறிவானது அகாரமாகும்.

கருத்து—மனதில் விகாரங்களற்றவர்களது பேரறிவு ஞானமயமாகும்.

ஞானம் - மோட்சம்.

10. சிந்தை யாங் காரஞ் செறிபுல னற்றக்கால்
முந்தியே யாதுமாம் வீடு.

உரை—சிந்தித்தலும், அகங்காரங்களும், நெருங்கி ஐம்புலன்களும் விலகினால் மோட்சமானது முன்னதாயுண்டாகும்.

கருத்து—கரணம் ஐம்புலனும் சட்டறுத்தால் சீக்கிரத்தில் மோட்சமுண்டாகும்.

---

9. தூயவொளிகாண்டல்.

1. தோன்றிய தெல்லாந் தொடக்கறுத்துத் தூய்வெ
தோன்றியக் காற் றூயவொளி. [ளியாய்த்

உரை—காணும்படியான எல்லாவற்றையும் தொடக் கறுத்து பரிசுத்த பிரகாசமாகக் காணப்பட்டால் ஞானப் பிரகாசமாகும்.

கருத்து—குற்றங்களைந்து சுத்தவெளிக் காணப்பட் டால் ஞானம் உதயமாகும்.

2. தெளிவாய தேச விளக்கொளியைக் காணில்
வெளியாய வீடதுவே யாம்.

உரை—தெளிவையுடைய அந்தர்முக தீயப்பிரகாசத் தை தெரிசனஞ்செய்தால் எல்லோராலும் வெளிப்படை யாக ஏற்றுக்கொள்ளக்கூடிய மோட்சம் அதுவேயாகும்.

கருத்து—உள்ளத்தில் காணப்படும் பிரகாசமே மோ ட்சமாகும்.

3. மின்டோலுருவவிளக்கொளிபோல்மேற்காணில்
முன்டோல மூலம் புகும்.

உரை—மின்னலைப்போன்ற சொரூபத்தை மேலிடத் தில் தீபப்பிரகாசம்போல காணப்படில் அது முன்போல மூலாதாரத்தில் புகுவதாகும்.

கருத்து—ஆராதாரத்தில் விளங்கும் ஞானப்பிரகாச மே மோட்சமாகும்

4. பளிங்கு வலம்புரி பானிகர்த்த தாகில்
துளங்கொளியாந் தூய நெறி.

உரை—பளிங்கையும், வலம்புரியையும், பாலையும் ஒப்பானதானுல் பரிசுத்தமுடைய சன்மார்க்கமானது விளங்குந் தேஜோமயத்தை யுடையதாகும்.

கருத்து—அந்தர்முகத்தில் வெண்மைநிறம் காணப்படில் மார்க்கமானது தேஜோமயத்தை யடையும்.

5. சங்கு நிறம்போற் றவள வொளிகாணில்
அங்கையி னெல்லியே யாம்.

உரை—சங்கினுடைய நிறத்தைப்போன்று வெண்மையான பிரகாசத்தைத் தெரிசித்தால் மோட்சம் உள்ளங்கையிலுள்ள நெல்லிக்கனிபோலாகும்.

கருத்து—வெண்மைநிற தெரிசனமே மோட்சத்திற்கும் கரதலா கமலம்போலாகும்.

6. துளங்கிய தூண்டா விளக்கொளி காணில்
விளங்கிய வீடாம் விரைந்து.

உரை—தூண்டுகோ லில்லாமற்படிதானே பிரகாசித்து விளங்கப்பட்ட தேஜோமப பிரகாசத்தைத் தெரிசித்தால் சீக்கிரமாக விளக்கமுடைய மோட்சமுண்டாகும்.

கருத்து—உள்ளகத்தே தூண்டாவிளக்கின் ஜோதியை தரிசித்தால் விரைவில் மோட்சமுண்டாகும்.

7. மின்மினி போன்ற விளக்காகத் தான்றோன்றில்
அன்னப் பறவையே யாம்.

உரை—மின்மினிப் பூச்சைப்போன்ற தீபப்பிரகாச தேஜோமயம் காணப்பட்டால் அன்னப்பட்சியைப்போல், உண்மையை உணரக்கூடும்.

கருத்து—உள்ளகதெரிசனத்தால் உண்மையைத்தெரியக்கூடும்.

விசேஷம்—அன்னப்பட்சிக்குப் பாலையும் நீரையும் பிரிக்கும் தன்மையுடையதால் 'அன்னப்பறவையேயாம்' என்றார்.

8. உள்ளொளி தோன்றி லுணரி லருளொளி
அவ்வொளி யாதி யொளி.

உரை—அந்தர்முக பிரகாசமானது வந்து காணப் பட்டால் திருவருட் பிரகாசமானது அந்த பிரகாசமே யாகும். அதுவே மோட்சத்திற்கு மூலதரிசன பிரகாச மாகும்.

கருத்து—உள்ளகவொளியே மோட்சமாகும்.

9. பரந்த விசும்பிற் பரந்த வொளிகாணில்
பரம்பரமே யாய வொளி.

உரை—எங்கும் பரவியிருக்கின்ற ஆகாயத்தில் வியா பித்திருக்கின்ற தேஜோமயத்தைக்கண்டால், அந்த தே ஜோமயப்பிரகாசமே சிவபெருமானாகும்.

கருத்து—இறைவனும் மோட்சமும் ஞானப்பிரகாசமே யாகும்,

10. ஆதி யொளியாகி யாள்வானுந் தானாகி
ஆதி யவனுருவு மாம்.

உரை—முதற்பொருளான கடவுளானவன் ஞானப் பிரகாச முடையவனாகியும், தானே ஆண்டருள் செய்வா னாகியும் ஆவது, ஆதியிலிருந்து அவனுடைய சொரூபமே யாம்.

கருத்து—எல்லாம் சிவசொரூபமே யாகும்.

---

## 10. சதாசிவம்.

1. பத்துத் திசையும் பரந்த கடலுலகும்
ஒத்தெங்கும் நிற்குஞ் சிவம்.

உரை—பத்துத்திசையும் பரவியிருக்கப்பட்ட சமுத்திரமுதல் உலகங்களிலும் பொருந்தியதாய், சிவசொரூபமானது எவ்விடத்திலும் வியாபித்திருக்கும்.

கருத்து—சிவசொரூபமானது எங்கும் வியாபித்திருக்கும்,

விசேஷம்—'எங்கும் நிற்கும் சிவம்' என்றது,
"அங்கிங்கெனாதபடி யெங்கும் ப்ரகாசமா
யானந்த பூர்த்தியாகி" என்பதினாலறிக.

2. விண்ணிறைந்து நின்று விளங்குஞ் சுடரோளி [போல
உண்ணிறைந்து நிற்குஞ் சிவம்.

உரை—ஆகாயத்தில் பரவியிருந்து விளங்கும் சூரியப்பிரகாசம்போல், சிவப்பிரகாசமானது உள்ளக இருதய கமலத்தில் நிறைந்து கலந்து வியாபிக்கும்.

கருத்து—சிவபெருமான், பகிர்முக சூரியப்பிரகாசம் போன்று ஆன்மகோடிகளின் அந்தர்முக இருதய பீடத்தில் பொருந்தி விளங்குவானாகும்.

3. ஆகமுஞ் சீவனு மாசையுந் தானாகி
ஏகமாய் நிற்குஞ் சிவம்.

உரை—சிவமானது சரீரமும், உயிரும், ஆசையும் தானேயாகி ஒன்றாக விளங்கும்.

கருத்து—சிவப்பொருளானது சரீரமாகி, சரீரத்திற்கு ஆன்மாவாகி, இரண்டிற்கும் பொருந்திய ஆசையாகி ஆராயுங்கால் ஒன்றே யெல்லாமாய் விளங்கும்.

4. வாயுவாய் மன்னுயிராய் மற்றவற்றி னுட்பொரு
ஆயுமிடந் தானே சிவம். [ளாய்

உரை—காற்றாகியும், நிலைபெற்ற உயிராகியும், இன்னும் அவற்றின் உட்பொருளாகியும் ஆராயுமிடமே சிவமாகும்.

கருத்து—எப்பொருள்களிடத்தும் ஆராயுமிடமே சிவமாகும்.

5. எண்ணிறந்த யோனி பலவாய்ப் பரந்தெங்கும்
உண்ணிறைந்து நிற்குஞ் சிவம்.

உரை—அளவு சொல்லக்கூடாத யோனிகளில் பல பலவிதமாகப் பரவி எவ்விடத்திலும் சிவப்பொருளானது உள்ளகத்தே வியாபித்திருக்கும்.

கருத்து—சிவமானது பல பல யோனிகளாலும் பல பல விதமாகப் பரவி விளங்கும்.

6. ஒன்றேதா னூழி முதலாகிப் பல்லுயிர்க்கும்
ஒன்றாகி நிற்குஞ் சிவம்.

உரை—ஒரு வஸ்துவே ஊழிக்காலமுதலாக பல உயிர்களுக்கும் சிவபெருமான் ஒருபொருளாகவே கலந்திருப்பான்.

கருத்து—சகல ஆன்மாக்களிலும் ஒருபொருளாகிய சிவபெருமான் கலந்திருப்பான்.

7. மூலமொன் றாகி முடிவொன்றா யெவ்வுயிர்க்கும்
காலமாய் நிற்குஞ் சிவம்.

உரை—ஆதியெனும் ஒருபொருளாகியும், முடிவெனும் ஒருபொருளாகியும், எல்லா ஆன்மாக்களும் காலமாகவும் சிவபெருமான் விளங்குவார்.

கருத்து—ஆதியும் அந்தமும் இடையே காலமுமாக இருப்பவன் சிவபெருமான் ஒருவனே.

8. மண்ணிற் பிறந்த வுயிர்க்கெல்லாந் தானாகி
விண்ணமே யாகுஞ் சிவம்.

உரை—உலகின் கண்ணுண்டான ஆன்மாக்களுக்கெல்லாம் தானே காரணப்பொருளாகி ஆகாயசஞ்சாரியாய் விளங்கப்பட்டதாகும் சிவமெனும்பொருள்.

கருத்து—இறைவனானவன் உலகத்திலுள்ள ஆன்மகோடிகளின் மனவெளியில் சஞ்சரிப்பவனாகும்.

9. தோற்றமது வீடாகித் தொல்லைமுத லொன்றாகி
ஏத்தவுரு மீச னுளன்.

உரை—உற்பத்தியே வீடாகவும், ஆதிமுதல் ஒரே பொருளாகியும் துதிசெய்யப்பட்டு வருகின்ற சர்வேஸ்வரன் உள்ளத்தி லிருக்கப்பட்டவனாகும்

கருத்து—உற்பத்திமுதல் முடிவ்வரையில் சிவமயமேயாம்.

விசேஷம்—உளன் என்பது உள்ளன், உள்ளத்தினுள்ளே இருக்கப்பட்ட சிவபெருமான்.

10. நிற்கும் பொருளும் நடையனவுந் தானாகி
உற்றெங்கும் நிற்குஞ் சிவம்.

உரை—நிற்கின்ற பொருளும், நடக்கின்ற பொருளும் தானேயாகி எங்கும் பொருந்தி யிருக்கப்பட்டது சிவபொருளாகும்.

கருத்து—இருப்பதிலும் நிகழ்வதிலும் சிவபெருமான் கலந்திருப்பான்.

---

## தன்பால்.

### 1. குருவழி.

1. தன்பா லறியுந் தவமுடையார் நெஞ்சகத்துள்
அன்பா யிருக்கு மரன்.

உரை—தனக்குரிய விஷயாதிகளை யறிகின்ற தவத்தை யுடையவர்களது மனத்தினுள்ளே சிவபெருமான் அன்புடனே எழுந்தருளி யிருப்பான்.

கருத்து—சர்வேஸ்வரன் தன்னைத்தானறிந்த தவசிகளின் மனதில் வீற்றிருப்பவனாகும்.

2. சிந்தை சிவமாகக் காண்பவர் சிந்தையில்
சிந்தித் திருக்குஞ் சிவம்.

உரை—தன் மனதையே சிவமாகப் பாவித்து காண்பவர்களுடைய மனத்தின் கண்ணே சிவசொரூபம் சிந்தித்திருக்கும்.

கருத்து—மனதையே சிவமென்று கருதுவோருக்கு சிவபெருமான் மனத்திலுறு நினைவாகவே இருப்பன்.

3. குருவி னடிபணிந்து கூடுவ தெல்லார்க்
கருவமாய் நிற்குஞ் சிவம்.

உரை—ஞானசிரியனுடைய பாதங்களை வணங்கி சேராதவர்களுக்கு சிவமானது அருவமாயிருக்கும்.

கருத்து—குருவடியை வணங்கி வழிபடுவோர்க்கே சிவம் தோற்றமாகும்.

4. தலைப்பட்ட சற்குருவின் சன்னதியி லல்லால்
வலைப்பட்ட மானதுவே யாம்.

உரை—உயர்ந்த ஞானசிரியனுடைய திருச்சந்நிதானத்தின்முன்னே பல்லாமல் வழியிலகப்பட்ட மானதுவேயாகும்.

கருத்து—ஞானசிரிய சந்நிதானத்தில் வழிபடவேண்டும்.

5. நேற்ப்பட்ட சற்குரு நேர்வழி காட்டில்
பிறிவற் றிருக்குஞ் சிவம்.

உரை—ஞானவழியிற் சேர்ந்த நல்ல குருமூர்த்தியானவர் உண்மையான வழியை உபதேசித்தால் பிரியாதுடன் கலந்திருப்பான்.

கருத்து—சற்குருவினுபதேசத்தால் சிவம் பிறிவற்றிருக்கும்.

விசேஷம்—ஞானசிரியன் - அறிவு.

'அறிவே குருவாகில்-அது மிஞ்சும் இது கெஞ்சும்'

என்பதினாலறிக.

6. நல்லன நூல்பல கற்பினுங் காண்பரிதே
எல்லை யில்லாத சிவம்.

உரை—நன்மையாகிய பல நூல்களைக் கற்றாலும், அளவு சொல்லப்படா வியாபகங்கொண்ட சிவ பழம்பொருளை காண்பது அருமையாகும்.

கருத்து—நன்மையை பயக்கும் அநேக நூல்களைக் கற்றாலும் சற்குருவின்றி சர்வ வியாயகப்பொருளை யறிவது அருமையாகும்

7. நினைப்பு மறப்பு மில்லாதவர் நெஞ்சந்
தனைப் பிரியாது சிவம்.

உரை—சிவபெருமானனவர், நினைப்பும், மறப்பும் இல்லாதவர் மனத்தை பிரியாது கலந்திருப்பான்.

கருத்து—இரண்டற்றவர்கள் சிந்தையில் சிவபெருமான் பிரியாது விளங்குவான்.

8. ஒன்றிலோன் றில்லாத மனமுடையா ருடல்
என்று மோன்ருது சிவம்.

உரை—ஒப்பற்ற பொருளாகிய சிவபெருமானிடத்தில் பொருந்தாத மனதையுடையவர்களுடைய சரீரத்தில் சிவபரம்பொருளானது எக்காலத்திலும் பொருந்தாது.

9. நாட்ட மில்லாவிடம் நாட்ட மறிந்தபின்
மீட்டு விடாது சிவம்.

உரை—எவராலும் உண்மையை யறியப்படாத இடத்தை உண்மையா யுணர்ந்தபின் சிவமயமானது மறுபடியுந் திரும்பவிடாது.

கருத்து—நாமா அவனை யறிந்தால் அவன் நம்மை விடமாட்டான்.

10. பஞ்சமாசத்த மறுப்பவர்க் கல்லா அல்
அஞ்ச லென்னுது சிவம்.

உரை—ஐந்து மகா பாதகத்தை ஒழிப்பவர்களுக்கல்லாமல் சிவமயமானது பயப்படவேண்டாமென்று சொல்லாது.

கருத்து—பாதகங்களில் விலகினவர்களை சிவம் பாது காக்கும்.

---

## 2. அங்கியிற்பஞ்சு.

1. அங்கியிற் பஞ்சுபோ லாகாயத்தே நினையில்
சங்கிக்க வேண்டா சிவம்.

உரை—அக்கினியிற்பட்ட பஞ்சுபோல வெட்டவெளியை தரிசிப்போமானால் சிவபெருமானைப்பற்றி யினி சந்தேகங்கொள்ள வேண்டியதில்லை.

கருத்து—நினையாமல் நினைவதே சிவமும் மோட்சமுமாகும்.

2. மெய்ப்பா லறியாத மூடர்த நெஞ்சத்தின்
அப்பால தாகுஞ் சிவம்.

உரை—உண்மை விஷயத்தை அறியாத மூடர்களுடைய மனதிற்கு சிவபெருமான் அன்னியமாக இருப்பான்.

கருத்து—ஞானமுடையவர்களிடமே சிவபெருமான் உடன் கலந்திருப்பனாகும்.

3. நெஞ்சகத்துணோக்கி நினைப்பவர்க் கல்லா அல்
அஞ்ச லேன்னது சிவம்.

உரை—மனதினுள்ளே பார்த்து சிந்திப்பவர்களுக் கல்லாமல் சிவ பழம்பொருளானது பயப்படவேண்டி சொல்லாது.

கருத்து—உள்நிலையில் யார் சிந்திக்கின்றார்களோ சிவ பெருமான் அவர்களை உண்மையில் காப்பவனாகும்.

4. பற்றிலா தோன் றினைப் பற்றினு லல்லது
கற்றதனு லேன்ன பயன்.

உரை—யாதொரு பற்றுமில்லாத ஒருபொருளை சேர்ந்து அடைந்தாலல்லாமல் சகல சாஸ்திரங்களையும் கற்றதினுல் என்ன பிரயோஜன முண்டாகும்.

கருத்து—நூல்களைப் படித்ததின் பயனுவது பற்றில்லாத பரமாத்மாவை அடைதலேயாம்.

5. தம்மை யறிவாரைத் தாமறிந்து கொண்டபின்
தம்மை யறிவரோ தான்.

உரை—தங்களைத்தாமே யறிவாரை தாம் அறிந்துக் கொண்டபின் தம்மைத்தாமறியும் உணர்வுண்டாகுமோ.

கருத்து—தன்னையுந் தலைவனையும் அறிந்துக்கொண்ட பிறகு மீண்டும் மற்றொன்றையுங் கருதார்.

6. அசபை யறிந்துள்ளே யழலேழ நோக்கில்
இசையாது மண்ணிற் பிறப்பு.

உரை—அசபா மந்திரத்தைத்தெரிந்து மனத்தினுள்ளே அக்கினி யுண்டாவதைக்கண்டால் பிறவியுண்டாக மாட்டாது.

கருத்து—அசபாமந்திரத்தை யறிந்து சிவயோகஞ் செய்கிறவர்களுக்கு மறுபிறவி யுண்டாவதில்லை.

7. இமையாத நாட்டத் திருந்துணர் வாருக்
கமையாத வானந்த மாம்.

உரை—இமைக்காத பார்வையிலிருந்து அறிகின்றவர்களுக்கு பொருந்துதற்கருமையான ஆனந்தமுண்டாகும்.

கருத்து—இமையாமல் ஓர் நிலையில் தரிசிப்பவர்களுக்கு கிடைப்பதற்கருமையான சிவந்தமுண்டாகும்.

8. துரியங் கடந்த சுடரொளியைக் கண்டால்
மரணம் பிறப்பில்லை வீடு.

உரை—துரியஸ்தானத்திற்கு அப்பால் இருக்கின்ற சுடர்மயப் பிரகாசத்தை தரிசித்தால் இறப்பும் பிறப்பும் இல்லையாம். மோட்சமுண்டாகும்.

கருத்து—சிவசொருபத்தை உள்ளபடியே தரிசிப்பவர்களுக்கு பிறப்பிறப்பின்றி மோட்சமுண்டாகும்.

௯. மதிபோ லுடம்பினை மாசற நோக்கில்
விதிபோ யகல விடும்.

உரை—களங்கமற்ற சந்திரனைப்போல உள்ளுடம்பை குற்றமறப் பார்த்தால் பிறவி யற்றுப்போம்.

கருத்து—உள்ளகத்து வெண்மைநிற சிவப்பிரகாசத்தை தரிசிக்கப்பட்டவர்களுக்கு பிர்மாவினலேற்படும் பிறவி அற்றுப்போம். விதி-பிர்மன், பிர்மாவினலுண்டாகும் பிறவி.

10. சீவன் சிவலிங்க மாகத் தெளிந்தவர்தம்
பாவ நசிக்கும் பரிந்து.

உரை—சிவனைச் சிவலிங்கமாக கருதி மனத்துளே தெளிந்தவர்களுடைய ஜென்மமென்னும் பாவம் அழிந்து போகும்.

கருத்து—சீவனே சிவன், சிவனே சிவன் என்று தெளிந்தவர்களுக்கு இனி பிறவியில்லையாம்.

---

3. மெய்யகம்.

1. மெய்யகத்தி னுள்ளே விளங்குஞ் சுடர்நோக்கில்
கையகத்தி னெல்லிக் கனி.

உரை—ஸ்தூலசூக்கும சரீரங்களுக்குள்ளே விளங்குகின்ற பரஞ்சுடரைக்காணில் மோட்சமானது உள்ளங்கையில் நெல்லிக்கனிபோல் கிடைக்கக் கூடியதாகும்.

கருத்து—ஞானதீப பிரகாசத்தை யறிந்தால் மோட்சமென்பது கரதலா கமலம்போலாகும்.

2. கரையற்ற செல்வத்தைக் காணுங் காலத்தில்
உரையற் றிருப்ப துணர்வு.

உரை—உணர்வானது எல்லையற்ற செல்வத்தைக் காணுங்காலத்தில் யாதொரு சொல்லுமில்லாம லிருப்பதாகும்.

கருத்து—உணர்ச்சியானது எல்லையற்ற செல்வப்பொருளாகிய சிவபெருமானை தரிசித்தால் வாய்பேசாது மௌனநிலையை யடையக்கூடும்.

3. உண்டு பசி தீர்ந்தார் போலுடம் பெல்லா அங்
கண்டுகோள் காதல் மிகும்.

உரை—உண்டு பசியைத் தீர்த்துக்கொண்டவர்களைப் போல, சரீரத்திற்குள் முழுதும் சிவனைக் கண்டுகொள்வாய் அப்போது ஆசை யதிகரிக்கும்.

கருத்து—பசியற்றவர் போன்று உள்ளிருக்கும் சர்வேஸ்வரனை யுணர்ந்தால் சிவயோக இச்சை யதிகரிக்கும்.

4. உரைசெயு மோசை யுரைசெய் பவர்க்கு
நரைதிரை யில்லை நமன்.

உரை—சொல்லும்படியான நாததத்துவ சப்தத்தை கூறப்பட்டவர்களுக்கு நரையும் திரையும் எமனும் உண்டாவதில்லை.

கருத்து—நாதத்தை உள்ளபடியே யுணர்ந்து சொல்பவருக்கு நரைதிரை சாக்காடு இல்லை.

5. தோன்றாத தூயவொளி தோன்றியக்காலுன்னைத்
தோன்றாமற் காப்ப தறிவு.

உரை—எவருக்கும் தோன்றப்படாத பரிசுத்தமாகிய பிரகாசம் காணப்பட்டால், உன்னை வெளிப்படுத்தாமல் காப்பது அறிவாகும்.

கருத்து—உணரக்கூடாத சிவத்தை யுணர்ந்துக்கொண்டால் அவ்வுணர்வுக்குடைய அறிவே யுன்னை பாதுகாக்கும்.

6. வாக்கு மனமு மிறந்த பொருள்காணில்
 ஆக்கைக் கழிவில்லை யாம்.

உரை—வாக்கு மனம் இல்லாத சிவப்பொருளைக் கண்டால் சரீரத்திற்கு யாதொரு அழிவும் உண்டாவதில்லையாகும்.

கருத்து—வாக்கு மனம் இறந்த பொருளாகிய சிவத்தைக்கண்டால் உடல் நிலைபெற்றிருக்கும்.

7. கண்ணகத்தே நின்று களிதருமே காணுங்கால்
 உன்னகத்தே நின்ற வொளி.

உரை—உன்னுடைய சரீரத்தின் கண்ணே எழுந்தருளியிருக்கின்ற சிவமயப் பொருளானது நோக்குமிடத்து ஞானவிழியினின்றிருந்து ஆனந்தத்தை யுண்டாக்கும்.

கருத்து—உள்ளகத்தே இருக்கும் சிவபொருளை தரிசித்தால் ஆனந்தத்தை யுண்டாக்கும்.

8. ஆனந்த மான வருளை யறிந்த பின்
 தானந்த மாகு மவர்க்கு.

உரை—ஆனந்தத்தை தரும்படியான திருவருளை தெளிந்தபிறகு அந்த அருளை அறிந்தவர்க்கு தானே அந்தமாக முடியும்

கருத்து—திரு அருளாகிய ஆனந்தத்தை தெளிந்தவர்கள் ஆனந்தரூபத்தை யடைவார்கள்.

9. மறவாமற் காணும் வகை யுணர்வாருக்
 கிறவா திருக்கலு மாம்.

உரை—மறவாமல் தரிசிக்கும் வகையை தெரிந்தவர்க்கு சாகாமல் இருக்கும்படியான சக்தி உண்டாகும்.

கருத்து—தேஜோமயப் பொருளாகிய சிவத்தை மறவாமல் இருக்கும் இயல்புடையவர்கள் பிறவி யெடுக்க மாட்டார்கள்.

10. விண்ணி றைந்து நின்ற பொருளே யுடம்பதன்
உண்ணி றைந்து நின்ற வொளி.

உரை—ஆகாயம் வரையில் வியாவித்த பொருளே சரீரமாம். அச்சரீரத்தினுள் வியாபித்திருக்கின்றதுவொளி.

கருத்து—சரீரமே ஆகாயமாகவும், அதனுள் அடங்கி, யிருக்கும் சர்வ பொருள்களிலும் தேஜோரூபமுடையவன் கலந்திருப்பான்.

---

4. கண்ணடி.

1. கண்ணாடி தன்னி லொளிபோ லுடம்பதனுள்
உண்ணாடி நின்ற வொளி.

உரை—கண்ணாடியில் தோன்றும் ஒளியைப்போல் சரீரத்திற்குள் தேஜோமயமாகிய சிவம் ஒளித்துக்கொண்டிருக்கிறது.

கருத்து—கண்ணாடியில் ஒளியிருப்பதுபோல சரீரத்திற்கும் கடவுளாகிய ஒளியிருக்கின்றது.

2. அஞ்சு புலனின் வழியறிந்தாற் பின்னைத்
துஞ்சுவ தில்லை யுடம்பு.

உரை—பஞ்சேந்திரியங்களின் விதிகளை அறிந்தபிறகு உடம்பு சாகாது.

கருத்து—புலன்களின் குணகுணங்களை உணர்ந்தால் சரீரம் இறப்பதில்லை.

3. நாபி யகத்தே நலனுற நோக்கிடில்
சாவது மில்லை யுடம்பு.

உரை—உந்திகமலத்தினிடமாக நன்மையை யடைய தபசிருக்கில் சரீரமானது சாவதில்லை.

கருத்து—உந்தியின் குணகுணங்களை உள்ளவாறே அறிந்தால் சரீரம் சாவதில்லை.

4. கண்டத் தளவிற் கடிய வொளிகாணில்
அண்டத்த ராகு முடம்பு.

உரை—கண்டத்தினிடமாக பொருந்திய பிரகாசத்தை காணில் அவர்கள் சரீரமானது தேவசரீரமாகும்.

கருத்து—விசுத்தி ஸ்தானத்தினிடமாக பொருந்திய பிரகாசத்தை கண்டவர்கள் சரீரம் தேவசரீரமாகும்.

5. சந்திர னுள்ளே தழலுற நோக்கினல்
சுந்தர மாகு முடம்பு.

உரை—சந்திர மண்டலத்தினுள்ளே அக்கினி பொருந்த தரிசிக்கில் சரீரமானது சூட்சுமரூபத்தை யடைசி ம்.

கருத்து—சந்திரமண்டலத்தில் சிவத்தை கண்டால் திரேகம் சூட்சுமமாகும்.

6. ஆர்க்குந் தெரியா வுருவந் தனைநோக்கில்
யார்க்கும் பரமா மவன்.

உரை—யாவருக்கும் எளிதிற் காணுதற்கரிய சிவத்தை நோக்கினல் பரம்பொருளாகிய சிவமாவான்.

கருத்து—காணுதற்கறிய சிவத்தை தரிசித்தவன் தேஜோசொரூபத்தை யடைவான்.

7. வண்ண மில்லாத வடிவை யறிந்தபின்
விண்ணவ ராகு முடம்பு.

உரை—அழகுஇல்லாத வடிவத்தையுடைய சிவத்தை அறிந்தபின் சரீரமானது தேவசரீரமாகும்.

கருத்து—அழகில்லாத ரூபமுடைய சிவனை தரிசித்தால் சரீரம் தேவசரீரமாகும்.

8. நெற்றிக்கு நேரே நிறைந்த வெளி காணில்
முற்று மழி துடம்பு.

உரை—சுழிமுனைக்கு முன்னே வியாபித்திருக்கும் சிவனை காணில் சரீரம் அழிவுபடாது.

கருத்து—நெற்றிக்கு நேரே வியாபித்திருக்கின்ற தேஜோமயமான சிவனை தரிசிப்பவர்கள் திரேகமானது என்றைக்கு மழியாது.

9. மாதூவெளியின் மனமொன்ற வைத்தபின்
போதக மாகு முடம்பு.

உரை—தூய்மையான ஆகாயத்தின்கண் மனதை பொருந்த வைத்தபிறகு சரீரமானது ஞானமயத்தை யடையும்.

கருத்து—பரிசுத்தமான வெளியில் மனதை உள்ளபடியே நிருத்தினல் சரீரம் ஞானநிலையை யடையும்.

10. சுத்தமோ டொன்றி மனமு மிறந்தக்கால்
முற்று மழியா துடம்பு.

உரை—மனமானது பரிசுத்தமான தத்துவத்தில் கலந்து சகலத்தையும் துறக்குமானல் சரீரம் எப்போதும் அழியாத நிலையை யடையும்.

கருத்து—மனமானது யாவற்றையும் நீக்கி சுத்தமாகிய தத்துவத்தில் கலந்தால் சரீரம் என்றும் அழியாது.

---

5. சூனியகாலமறிதல்.

1. நிரவியழ லுருவாய் நீண்ட வெளிகாணில்
அரவணையா னகு முடம்பு.

உரை—நிறைந்து அக்கினிசொரூபமாய் வியாபித்திருக்கும் ஆகாயத்தைத் தரிசித்தால் சரீரமானது மஹாவிஷ்ணுவின் சொரூபத்தை யடையும்.

கருத்து—சிவத்தை சிற்றம்பலவெளியில் தரிசித்தால் சரீரம் விஷ்ணுசொரூபமாகும்.

2. உருவத் தழலாக வுள்ளத்தே சென்று
புருவத் திடையிருந்து பார்.

உரை—புருவத்தின் மத்தியமாகிய சுழிமுனையிலிருந்து அக்கினிசொரூபமாக மனதின்கண்ணே சென்று சர்வேஸ்வரனை காண்.

கருத்து—தன்னை அக்கினிசொரூபமாச்கி சுழிமுனையிலிருந்து சிவத்தை தரிசித்தல் வேண்டும்.

3. புருவத் திடையிருந்து புண்ணியனைக் காணில்
உருவற்று நிற்கு முடம்பு.

உரை—சுழிமுனையிலிருந்து சிவத்தைத் தரிசிக்கில் சரீரம் சூட்சுமமாகும்.

கருத்து—புருவத்திடையிலிருக்கும் சுழிமுனையிலிருந்து சிவத்தை தரிசித்தால் சரீரமானது சூட்சும சரீரமாகும்.

4. அகம்புறம் போரப் பொருளை யறியில்
உகம்பல காட்டு முடம்பு.

உரை—உள்ளும் வெளியிலும் மாறுதப் பொருளாகிய சிவத்தை தரிசித்தால் சரீரமானது அநேககாலமிருக்கும்.

கருத்து—உள்ளும் வெளியிலும் வியாபித்திருக்கும் சிவத்தை தரிசித்தால் சரீரம் அநேககாலம் நீடித்திருக்கும்.

5. ஆவிபாழ் போகா தடக்கி யிருந்த பின்
ஓவிய மாகு முடம்பு.

உரை—சரங்களை வெளியேவிட்டு பாழாக்காமல் அடக்கி காத்துக்கொண்டால் சரீரம் அசைவற்றிருக்கும்.

கருத்து—சரத்தை வெளியேவிடாது உள்ளே அடக்கினுல் சரீரம் ஞானத்தை யடையும்.

6 அஞ்சு மடக்கி யறிவோ டிருந்த பின்
துஞ்சுவ தில்லை யுடம்பு.

உரை—ஐந்து புலன்களை அடக்கி ஞானத்துடனிருந்தால் சரீரம் சாவதில்லை.

கருத்து—ஐம்புலனை ஒடுக்கி தன் வயப்படுத்தினுல் சரீரம் மரணமில்லாததாகும்.

7. தீயாக உள்ளே தெளிவுற நோக்கினுல்
மாயாது பின்னை யுடம்பு.

உரை—அக்கினிசொரூபமாக மனதின்கண்ணே தெளிவுபெற ஞானத்தை தரிசித்தால் சரீரமானது பிறகு சாவாது.

கருத்து—உன்முகத்தில் சிவத்தை தரிசித்தால் சரீரம் சாகாது.

8. தானந்த மின்றி தழலுற நோக்கிடில்
ஆனந்த மாகு முடம்பு

உரை—தான் முடிவில்லாமல் அக்கினியை பொருந்த தரிசித்தால் சரீரம் ஆனந்தமாகிய மோட்சத்தையடையும்.

கருத்து—முடிவில்லாத பொருளை தரிசித்தால் சரீரம் பேரின்பத்தை யடையும்.

9. ஒழிவின்றி நின்ற பொருளை யுணரில்
அழிவின்றி நிற்கு முடம்பு.

உரை—எங்கும் நீங்காமல் வியாபித்திருக்கும் சிவத்தை தரிசித்தால் சரீரமானது அழிவில்லாமலிருக்கும்.

கருத்து—எங்கும் வியாபித்திருக்கும் சிவத்தை தரிசித்தால் சரீரம் அழியாது.

10. பற்றற்று நின்ற பழம்பொருளைச் சிந்திக்கில்
முற்று மழியா துடம்பு.

உரை—யாதினும் ஆசையற்ற சிவத்தை நினைந்தால் சரீரம் முழுதும் கெடாது.

கருத்து—பற்றற்ற சிவத்தை நினைக்கில் சரீரம் முழுதும் கெடாது.

---

## 6. சிவயோகநிலை.

1. அடிமிசை வாயு வடுத்தடுத் தேகி
முடிமிசை யோடி முயல்.

உரை—மூலாதாரத்தில் காற்றென்னும் சரமானது அடுத்து அடுத்துபோய் சுழிமுனை ஸ்தானத்தின் கண்ணே பிரயத்தனபடு.

கருத்து—சரீரத்தோடு கூடவே சம்பந்தப்பட்டு சுழிமுனை ஸ்தானத்தில் செல்லுதற்கு முயலவேண்டும்.

2. உண்ணடி வாயு வதனை யுடனிறப்பி
விண்ணோடு மெள்ள விடு.

உரை—உள்ளகத்திலுள்ள காற்றை சரீரத்திற்குள் பூரிக்கும் பக்ஷத்தில் மெதுவாக வெளியே விடுவாய்.

கருத்து—சரீரத்தினுள்ளே இயங்கும் சுவாசத்தை உள்ளே நிரப்பி கும்பித்து வெளியே மெதுவாக விடுவாய்.

3. மெள்ள விரேசித்து மெய்விம்மிப் பூரித்து
கொள்ளுமின் கும்பங் குறித்து.

உரை—மெதுவாக இரேசகஞ்செய்து சரீரம் விம்முதலடைய உள்ளே பூரகஞ்செய்து அளவுடன் கும்பகஞ் செய்யுங்கள்.

கருத்து—சரத்தை இரேசகத்திலும் பூரகத்திலும் கிரமப்படி மெதுவாக செய்து கும்பகங்கொள்ள வேண்டும்.

4. இரேசக முப்பத் திரண்டது மாத்திரை
பூரகம் பத்தாறு புகும்.

உரை—இரேசகத்தினுடைய மாத்திரையளவு முப்பதிரண்டும், பூரகத்தினுடைய மாத்திரை பதினாறுபுகும்.

கருத்து—இரேசகத்திற்கு மாத்திரை முப்பத்திரண்டும், பூரகத்திற்கு மாத்தி பதினாறுமாகும்.

5. கும்பக நாலோ டறுபது மாத்திரை
தம்பித் திடுவ துதான்.

உரை—கும்பகத்திற்கு மாத்திரை அறுபத்தினாலாக ஸ்தம்பிக்கவேண்டும்.

கருத்து—கும்பகத்திற்கு மாத்திரை அறுபத்தினாலாகும்.

இரேசகம்—முப்பத்திரண்டு மாத்திரை.

பூரகம்—பதினாறு மாத்திரை.

கும்பகம்—அறுபத்தினாலு மாத்திரை பிரமாணம்.

6. மூன்ன மிரேசித்து மூயலும்பின் பூரகம்
பின்னது கும்பம் பிடி.

உரை—முதல் இரேசகத்தையும் இரண்டாவது பூரகத்தையும் மூன்றாவது கும்பகத்தையும் கிரமப்படி செய்யவேண்டும்.

கருத்து—சரத்தின் சாதகம் கிரமப்படியே செய்யவேண்டும். இன்றேல் பல துன்புறுத்தும்.

7. ஈரைந் தெழுபத்தீ ராயிர நாடியுஞ்
சேருமின் வாயுச் செயல்.

உரை—தசநாடிகளையும் எழுபத்தீராயிர நாடிகளையும் வாயுவோடு சேருங்கள்.

கருத்து—உரிய நாடிகளை வாயுவுடன் சேர்க்கவேண்டும்.

8. வாசலீ ரைந்து மயங்கிய வாயுவை
யீசன்றன் வாசலி லேற்று.

உரை—தசவாசல்களிலும் மயங்கி யிருக்கும் வாயுவை சிவப்பொருள் எழுந்தருளி யிருக்கும் வாயலில் செலுத்துவாய்.

கருத்து—பத்து வழியில் சஞ்சரிக்கும் பிராணவாயுவை சுழிமுனை வழியில் செலுத்துவாய்.

9. தயா வி னில்வாயு வலத்தி லியங்கில்
தியான சமாதிகள் செய்.

உரை—தயவுடன் வாயு வலதுபக்கத்தில் சஞ்சரிக்குமானல் தியானமும் சமாதியுஞ் செய்வாய்.

கருத்து—வாயுவானது சூரியகலையில் சஞ்சரிக்கும் போது தியானசமாதி முதலியவைகளை செய்யவேண்டும்.

10. ஆதியா மூல மறிந்தஞ் செழுத்தின்
போதியா தோது பினை.

உரை—அப்பால் முதன்மையாகிய காரணத்தைத் தெரிந்து பஞ்சாட்சரத்தை பிறர்அறியாது ஓதல்வேண்டும்.

கருத்து—பிறகு மூலப்பொருளை யறிந்து பஞ்சாட்சர தியானம் செய்யவேண்டும்.

விசேஷம்—போதியாதோது என்றது பிறர்அறியாது மௌனத்தில் சிந்திக்கவேண்டும்.

---

## 7. ஞான நிலை.

1. தற்புருட மாமுகந் தன்னிற் றனியிருந்
துற்பன மஞ்சை யுரை.

உரை—தற்புருடமான உயர்வாகிய இடத்தில் தனியேயிருந்து மேலாகிய பஞ்சாட்சரத்தை தியானஞ் செய்வாயாக.

கருத்து—தனியே தற்புருஷமுகத்தில் பஞ்சாட்சர சிந்தனை செய்யவேண்டும்.

2. தற்புருட மாமுகமேற் றாரகைதன் மேலே
நிற்பது பேரொளி நில்.

உரை—தற்புருட முகத்தின்மேலிருக்கும் நட்சத்திரத்தின்மேலே இருக்கப்பட்டது பேரொளியாகும். அவ்விடத்தில் நிற்பாயாக.

கருத்து—தற்புருட முகத்திற்கு மேலாய் நட்சத்திரத்தின்மேலே யிருக்கும் பெரிய பிரகாசத்தில் அறிவை நிறுத்துவாயாக.

3. ஓதிய தற்புரு டத்தடி யோவ்வவே
பேதியா தோது பின்.

உரை—சொல்லும்படியான தற்புருட முகத்தடியின் கண் ஒப்புடன் பிறகு மனவித்தியாசமின்றி தோத்திரம் செய்.

கருத்து—மனவித்தியாசமில்லாமல் தியானம்செய்.

4. கொழுந்துறு வன்னி கொழுவுற வொவ்வில்
எழுந்தா ரகையா மிது.

உரை—கொழுந்துவிட்டுப் பிரகாசிக்கும் அக்கினிச் சுடரானது செம்மையாக சம்பந்தப்பட்டால் இது உண்டாகும் நட்சத்திரப் பிரகாசமாகும்.

**5. மறுத்துக் கொளுவிடு வன்னி நடுவே**
**குறித்துக் கொளுஞ்சீயைக் கூட்டு.**

உரை—தடுத்து கொளுத்துகின்ற அக்கினிநடுவே யாவற்றையுங் குறிக்கும்படியான சிகாரத்தைச் சேர்ப்பாயாக.

கருத்து—அக்கினி பிரகாசத்தில் மனதைச் சேர்க்க வேண்டும்.

**6. காலுந் தலையு மறிந்து கலந்திடில்**
**சாலவு நல்லது தான்.**

உரை—காலையுந் தலையையுந் தெரிந்து கலந்துக்கொண்டால் மிகவும் நல்லதாகும்.

கருத்து—அங்கு காலும் தலையும் அறியவேண்டும்

**7. பொன்னொடு வெள்ளி யிரண்டும் பொருந்திடில்**
**அன்னவன் றனதுவே யாம்.**

உரை—சூரியகலை சந்திரகலை யிரண்டும் சேர்ந்தால் உண்டாகும் சுழிமுனையே இறைவன் திருவடியாகும்.

கருத்து—சுழிமுனையே சிவபெருமானாகும்.

**8. நின்ற வெழுத்துட னில்லா வெழுத்தினை**
**யொன்றுவிக்கி லொன்றே யுள.**

உரை—நிற்கும் எழுத்துடனே நிற்காத எழுத்தை ஒன்றாகப் பொருந்தச் சேர்த்தால் உள்ளது ஒருபொருளே யாகும்.

கருத்து—இரண்டும் சேர்ந்தால் ஒன்றேயாகும்.

**9. பேசா வெழுத்துடன் பேசு மெழுத்ுறில்
ஆசான் பரநந்தி யாம்.**

உரை—மௌனுட்சரத்துடனே பேசு மட்சரஞ்சேர்ந் தால் அறிவெனுங் குருவானவன் சர்வேஸ்வரனுவான்.

கருத்து—அறிவும் சிவமும் சேர்ந்தால் அதுவே குரு வும் கடவுளுமாகும்.

**10. அழியா வுயிரை யவனுடன் வைக்கில்
பழியான தோன்றில்லை பார்.**

உரை—நிலையான ஆன்மாவை பரமேஸ்வரனிடத்தி லே சேர்த்து வைத்தால் யாதொரு பழியும் வருவதில்லை அதனை யுணர்வாய்.

கருத்து—இரண்டும் ஒன்ருகினல் இனி எப்பிறவியும் உண்டாவதில்லை.

---

8. ஞானம்பிரியாமை.

**1. பிறந்திட மாலிடம் பேரு திருப்பின்
இறந்திடம் வன்னி யிடம்.**

உரை—பிறந்த இடமாவது உந்தியாகும். நீங்காதிரு க்குமாயின் இறந்த இடமானது அக்கினியிடமாகும்.

கருத்து—பிறந்தவிடம் உந்தியும் இறந்தவிடம் அக்கி னியுமாகும்.

**2. சாகா திருந்த தலமே மவுனமது
ஏகாந்த மாக விரு.**

உரை—சாகாமல் இருந்தவிடமே மவுனமாகும் அதே இடமாகக் கொண்டிரு.

கருத்து—நிலைபெற்ற ஏகாந்த பீடத்தி லிருப்பாய்.

3. வெளியில் விளைந்த விளாவின் கனிதான்
ஒளியி லொளியா யுறும்.

உரை—ஆகாயத்தி லுற்பவமாகிய விளாவின் பழம் பொருளே பிரகாசத்திலுண்டான பிரகாசமாகும்.

கருத்து—வெளிச்சத்தி லுண்டாகும் பிரகாசமே சிவமாகும்.

4. மறவாம நினையா மவுனத் திருக்கில்
பிறவா ரறிவார் பினை.

உரை—மறவு நினைவு இல்லாமல் மௌன ஞானத்திலிருந்தால் பிறகு பிறக்கவும் இறக்கவு மாட்டார்கள்.

கருத்து—மறவு நினைவு அற்றால் பிறப்பு இறப்பு அறும்.

5 குருவாம் பரமந்தி கூடல் குறித்தாங்
கிருபோது நீங்கா திரு

உரை—குருவாகிய பரமேஸ்வர சேர்க்கையை நினைத்து அங்கு இரண்டுவேளையும் பிரியாம லிருக்கவேண்டும்.

கருத்து—இருபோதும் சரத்தை அப்பியாசிக்கவேண்டும்.

6. சுந்தரச் சோதி துலங்கு மிடமது
மந்திரச் சக்கர முமாம்.

உரை—அழகுடைய பிரகாசமானது விளங்குகின்ற இடமே மந்திரமும் சக்கரமுமாகும்.

கருத்து—மந்திரமும் யந்திரமும் பரஞ்சோதியேயாகும்.

7. தூராதி தூரஞ் சொல்லத் துலையாது
டாராப் பராபரம் பார்.

உரை—பார்க்கக்கூடிய பரம்பொருளானது தூராதி தூரத்தி லிருக்கும். அதை சொல்லுவதற்கியலாது. நீ யறிவாயாக.

கருத்து—பார்ப்பதற்கும் சொல்லுதற்கும் தூரமான பரம்பொருளை உள்ளே யறிவாயாக.

8. ஈரொளி யீதேன் றிறைவ னுரைத்தனன்
நீரொளி மீது நிலை.

உரை—இது இரண்டு பிரகாசமென இறைவன் சொன்னான். அவ்விரண்டொளிமேலே உயர்நிலையாகும்.

கருத்து—சந்திர சூரியனுக்குமேல் உள்ள சுழிமுனையே உயர்ந்த நிலையாகும்.

9. அந்தமு மாதியு மில்லா வரும்பொருள்
சுந்தர ஞானச் சுடர்.

உரை—ஆதியந்தமில்லாத பொருளே அழகிய ஞானப் பிரகாசமாகும்.

கருத்து—ஞானவொளியானது ஆதியந்தமில்லாதது.

10. இதுமுத்தி சாதனமொன் றேட்டில் வரைந்து
பதியவைத் தனன்குரு பார்.

உரை—இதுவே மோட்சவழியென்று ஏட்டிலெழுதி மனதில் பதியவைத்தவன் ஞானசிரியனாகும். அறிவாயாக.

கருத்து—இதுவே மோட்ச சாதனமென்று அமைத்தவன் குருவாகும்.

---

## 9. மெய்ந்நெறி.

1. செல்லல் நிகழல் வருகால மூன்றினையுஞ்
சொல்லு மவுனத் தொழில்.

உரை—மவுனஞானத்தின் பயனுவது சென்றகாலம் நடக்கும் காலம் வருங்கால மூன்றினையும் சொல்லுதலாம்.

கருத்து—மவுன ஞானமடைந்தால் மூன்று காலத்தையும் சொல்லும்.

2. பஞ்சிற்படு பொறிபோலப் பரந்திருந்து
துஞ்சாது ஞான சுடர்.

உரை—பஞ்சியிலகப்பட்ட அக்கினியைப்போல் எங்கும் வியாபித்திருந்து ஞானப்பிரகாசமானது உறங்காது.

கருத்து—ஞானவொளியானது பஞ்சிற்பட்ட அக்கினியைப்போல் வியாபித்திருக்குமேயன்றி உறங்காது.

3. இமைப்பிற் பரந்தங் கொடுங்குமின் போல்
நமக்குட் சிவன்செயல் நாடு

உரை—இமைநேரத்தில் பரவி அப்போதே ஒடுங்கும் மின்னலைப்போல, நமக்குள்ளே சிவபிரானது செயலை விரும்பு.

4. குவியத்து மனத்தைக் குவித்துள்ளேயோங்கில்
சேவித்துப் பெறுவ தேவன்.

உரை—மனதை ஒடுக்கி உள்ளே குவித்து உயர்ந்தால் ஜெபித்து அடைவது என்ன?

5. காலுந் தலையு மொன்றாகக் கலந்திடம்
நாலா நிலைபென நாடு.

உரை—காலும் தலையும் ஒன்றாகக்கலந்த இடம் அதுவே நாபிக்கமலம் என்றுக்கொள்.

6. மூல நிலமிசை மூன்று நிலத்தினில்
சூல மருந்துஞ் சிவம்.

உரை—மூலாதாரத்தின் மூன்றுமிடத்தில் சிவபெருமானவர் எழுந்தருளி யிருப்பார்.

7. எழுஞ் சுடருச்சியின் மேன்மனம் வைக்கத்
தொழி லொன் றிலாத சுடர்.

உரை—எழும்பும் பிரகாசத்தையுள்ள உச்சிபின்மேல் மனதை நாட்டினல் தொழிலொன்றுமில்லாத பிரகாசமாகும்.

8 அடைத்திட்ட வாசலின் மேன்மனம் வைத்[து]
படைத்தவன் தன்னையே பார்.

உரை—கதவை யடைத்திருக்கும் வாசலின்மேல் மனதை நாட்டி சிருஷ்டிகர்த்தாவாகிய கடவுளைப்பார்.

9. அறுபதோ டாறு வருட மிதனை
உறுதிய தாக வுணர்.

உரை—அறுபத்தாறு வருஷம் வரைக்கும் இதனை உறுதியாக தெரி.

10. அட்டமா சித்தி அடையுமோ ராண்டினில்
இட்ட மிதனை தெரி.

உரை—ஒருவருஷத்தில் அஷ்டமாசித்திகள் உண்டாகும். இஷ்டமாக இதனை தெரிந்துக்கொள்.

---

## 10. துரியதரிசனம்.

1. வன்னிய தெட்டு மதியம் பதினாறு
முன்னிய பன்னிரண்டு மூன்.

உரை—சூரியன் எட்டும், சந்திரன் பதினாறும், நினை த்த பன்னிரண்டும் உள்ளே அடக்கவேண்டும்.

2. சூரியன்வன்னியோன் றாகிடிற் சோமனும்
பாரு மினிது பயன்.

உரை—சூரியனும் அக்கினியும் ஒன்றானால் சந்திர னும். இந்தப் பிரயோசனத்தை அறியவேண்டும்.

3. மதியோடு வன்னி யோன்றாக வேவர்தால்
கதிரவ னமேன்று காண்.

உரை—சந்திரனுடன் அக்கினியும் ஒன்றாகச்சேர்ந் தால் சூரியனும். எப்போதும் அறிவாயாக.

4. மதிக்குட் கதிரவன் வந்தங் கோடுங்கில்
உதிக்குமாம் பூரணைச் சோல்.

உரை—சந்திரனுக்குள்ளே சூரியன் வந்து ஒடுங்கி னல் அது பௌர்ணமியெனும் பெயராக உண்டாகும்.

5. தோற்றுங் கதிரவ னுண்மதி புக்கில்.
சாற்றுமமா வாசை தான்.

உரை—காணக்கூடிய சூரியன் சந்திரனோடு இயங்கி னல் சொல்லும்படியான அமாவாசையாகும்.

6. வன்னி கதிரவன் கூடிடி லத்தகை
பின்னிவை யாகு மேலாம்

உரை—அத்தகைய அக்கினியும் சூரியனுங் கூடிடில் பிறகு இவைகளே யெல்லாமாகும்.

7. அமாவாசை பூரணை யாத மவர்க்குச்
சமனு முயிருடம்பு தான்.

உரை—அமாவாசையே பௌர்ணமியாக கொள்ளு பவருக்கு உயிருமுடம்பும் சமானமாகும்.

8. அண்டத்திலு மிந்த வாறென் றறிந்திடு
பிண்டத்திலு மதுவே பேசு.

உரை—வெளியண்டத்தில் இந்த தன்மையென்று அறிவதோடு, உள் அண்டத்திலும் அப்படியே யாகுமென்று கொள்வாய்.

9. ஏறு மதிய மிறங்கிடி லுறங்கிலும்
கூறுமப் பூரணை கோள்.

உரை—ஏறும்படியான சந்திரகலை இறங்கினல் உறங்கும். அப்போது அப்பௌர்ணமியை உட்கொள்ளுவாய்.

10. உதிக்கு மதியமுங் கண்டங் குறங்கில்
மதிக்கு மமாவாசை யாம்

உரை—உதயமாகும் சந்திரனையும் கண்டு உறங்கினல் அதுவே நினைக்கும் அமாவாசையாகும்.

---

## 11. உயர்ஞானதரிசனம்.

1. கோண்டிடு மண்டல மூன்றங்கி தன்னையிப்
பிண்டமு மூழி பிரியா.

உரை—எவராலுங் கொள்ளப்பட்ட சோமசூரியாக்கினி மண்டலங்களுள் அக்கினிமண்டலத்தை பிண்டத்திலும் ஊழியிலும் பிரியமாட்டாது.

2. வெள்ளி புதனோடு திங்க ளிடமேன
தள்ளுமின் கால சரம்.

உரை—காலமோடு நடக்கும் சரத்தை வெள்ளி, புதன், திங்கட்கிழமைகளில் சந்திரகலையில் நடைபெறச் செய்யவேண்டும்.

3. சேவ்வாய் சனிஞா யிறுவல பாக
கோள்ளிலிவ் வாறிடறு மில்.

உரை—செவ்வாய், சனி, ஞாயற்றுக்கிழமைகளில் காலசரத்தை சூரியகலையில் நடைபெறச் செய்யில் துன்பமில்லை.

4. வளர்போன் னிடம்பிறைத் தேய்வு வலமா
வளர்பிறை யேன்றே மதி.

உரை—வளர்பிறை வியாழக்கிழமையில் இடது நாசியிலும், தேய்பிறை வியாழக்கிழமையில் வலது நாசியிலும் சரம் செல்லும்.

5. வலத்திற் சனிக்கே யிராட்பகல் வாயு
சேலுத்து பேராது சேயல்.

உரை—சனிக்கிழமை இரவும்பகலும் வாயுவை வலது நாசியில் செலுத்துவாய். இதுவே யதன் இயக்கை.

6. இயங்கும் பகல்வல மிராவிடம் வாயு
தயங்குறல் நாடிக்குட் டான்.

உரை—வாயுவானது விளங்கும்படியான நாடிக்குள் பகலில் வலமாகவும், இரவில் இடமாகவும் நடக்கும்.

7. அரசறி யாம லவன்பே ருறைந்து
தரைதனை யாண்ட சமன்.

உரை—அறிவானந்தத்தை யறியாமல் அவன் பெயரைமாத்திரம் கூறிடில், தரையை ஆண்டதற்குச் சமானமாகும்.

8. கல்லாத மூடர் திருவுருக் கொண்டிடச்
செல்லாத தென்ன செயல்.

உரை—உள்ளதை யுணராத மூடர்கள் திருவுருவத்தை யடைய முடியாதது. இது என்னசெயலாகும்.

9. திருவருட் பாலைத் தெரிந்து தெளியில்
குருவிருப் பரமென்று கொள்.

உரை—திருவருள் என்னும் அமிர்தத்தை அறிந்து தெளிவடைந்தால் அதுவே ஞானசாரியனுடைய பீடமென்று கொள்ளுவாய்.

10. கற்கிலுங் கேட்கிலும் ஞானக் கருத்துற
நிற்கிற் பரமவை வீடு.

உரை—சாஸ்திரங்களைக் கற்றாலும், கேட்டாலும், ஞானவழியிலிருந்தால் பரம்பொருள் விளங்கும் மோட்ச மாகும்.

கருத்து—ஞானமார்க்கத்தைக் கற்று கேட்டு அது வழியே இருக்கில் மோட்சம் கைகூடும்.

ஔவைக்குறள்

மூலமும், ஞானதீபார்த்த உரையும்

முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்

ஔவையார் திருவாய்மலர்ந்தருளிய

# சரயோகஞானம்.

"கரியதோர் முகத்தையொத்த கற்பகத்தை கைதொழ
கலைகள்நூல்கள் ஞானமும் கருத்தில்வந் துதிக்குமே."

"உருதரித்தநாடுதன்னி லோடுகின்ற வாயுவை
கருத்தினாலிறுத்தியே கபாலமேற்ற வல்லிரேல்
விருத்தர்களும்பாலராவர் மேனியும் சிவக்குமே
அருடரித்தநாதராணை யம்மையாணை யுண்மையே."

"கையறவிலா துநடுக் கண்புருவப்பூட்டு
கண்டுகளிகொண்டுதிறந் துண்டுநடுநாட்டு
ஐயர்மிகஉய்யும்வகை அப்பர்விளையாட்டு
ஆடுவதென்றேமறைகள் பாடுவதும்பாட்டு."

"வல்லதோர் பிராணநிலை தனையறிந்து
வாசிதனை கும்பகத்தில் நிறுத்திக்கொண்டால்
கல்லுமலை கறடெலாம் பொன்னதாச்சு
கண்பட்ட விடமெலாம் கைலையாச்சு
நல்வினை தீவினைக் கவிழ்தமாக்சு
நாடின பெரியோர்க்கு நாட்டமாச்சு
புல்லறிவோர் தங்களுக்குப் பேய்தானச்சு
பூரணத்தை யறிந்தவர்க்கு ஞானமாச்சே."

இந்த உலகின்கண் உற்பவமான ஜீவாத்மாவாகிய நாம், பந்த சம்சார ஜனனமரண துக்கசாகர வித்தைக் கருவறுத்து, சூக்ஷ்மமாயிருக்கும் பரப்பிரம்ம சொரூப நிலையை அடைய, அதற்கு சரமே முதற்காரணமா யிருக்கின்றது. சரம் என்பது:—காற்று, மனம், ஜீவன், சுவாசம், மூச்சு, பிராணன், ஆவி, உயிர், உயிர்ப்பு இவை முதலாகச் சொல்லப்பட்டது. இந்த சரத்தை அநுஷ்டிப்பதற்கு முன்னதாக "தத்வமசி" மந்திரமும், அதன் அர்த்தமும், 'பிரணவம்" என்னும் ஏகாக்ஷரமும், அதன் அர்த்தமும் தெரிந்துக்கொள்ள வேண்டியது. அதன் பிறகு சரத்தை அநுஷ்டானத்திற்குக் கொண்டுவந்து, அதுவழியே பிராணயம் செய்து ஞானத்தை யடைய வேண்டியது.

## தத்வமஸியும் அதன் அர்த்தமும்.

தத்-பரப்பிரமம், த்வம்-ஜீவாத்மசொரூபியா யிருக்கப்பட்டநீ, அஸி-ஆகின்றாய்.

அதாவது, இந்த காயத்திரி மந்திரம் ஜபித்து வந்தால், ஜீவாத்மசொரூபியா இருக்கப்பட்டநீ, அந்த சாக்ஷாத் பரப்பிரம்ம சொரூபமாகின்றாய்.

## காயத்ரீ மந்திரமும் அதன் அர்த்தமும்

ஓம்பூ:, ஓம்புவ:, ஓம்ஸுவ:, ஓம்மஹ:, ஓம்ஜந:
ஓம்தப:, ஓம்ஸத்யம், ஓம்தத்ஸவி துர்வரேணியம்,
பர்கோ தேவஸ்ய தீமஹி, தியோயோநம:
ப்ரசோதயாத், ஓம் ஆபோஜ்யோ தீரஸோ
ம்ருதம் ப்ரஹ்ம பூர்புவஸ்ரோம்.

---

தத்ஸவி தூர்வரேண்யம் 'அ' அகாரம்.
பர்கோ தேவஸ்ய தீமஹீ 'உ' உகாரம்.
தியோயோ நமஃ ப்ரசோதயாத் 'ம' மகாரம்.

அகார உகார மகாரம் இம்மூன்றும் சேர்ந்தது ஓங்காரம். இதுவே ஏகாக்ஷரம்; இதுவே பிரணவம்.

---

## பிரணவமும் அதன் அர்த்தமும்.

பிரணவம் என்பது அ-உ-ம இம்மூன்றும் சேர்ந்த ஓம் என்று சப்தமுண்டாயிற்று.

'அ' காரம்—பிர்மா, ரேசகம்.
'உ' காரம்—விஷ்ணு, பூரகம்.
'ம' காரம்—ருத்திரன், கும்பகம்.

---

மேற்சொன்ன மூன்றையும் அறிந்துக்கொண்டு முதல் அநுஷ்டானத்திற்குக்கொண்டுவரவேண்டியது சரம். இந்தச்சரம், நாசியின் வழியாய் உசுவாச நிசுவாசமாக (உசுவாசம் வெளியேவிடும் சுவாசம். நிசுவாசம் உள்ளே போகும் சுவாசம்) நாள் ஒன்றுக்கு நடைபெறும் 21600-சுவாசங்களில் சந்திரன் சூரியன் அக்கினி என்று, இடைகலை, பிங்கலை, சுழிமுனை மூன்று நாடிகளாக நடக்கும்.

இடைகலை என்பது இடது நாசியிலும், பிங்கலை என்பது வலது நாசியிலும், சுழிமுனை என்பது இரண்டு நாசியிலும் வரப்போகவும் இருக்கின்ற சுவாசம். இதற்கு (அஜபா) என்று பெயர். இடைகலை என்பது சந்திரனும், பிங்கலை என்பது சூரியனும், சுழிமுனை என்பது அக்கினியுமென்னப்படும்.

இன்னும் இடது பாரிசமாகவும் இடது நாசியிலும் வரும் சந்திரநாடி 'சத்தி' என்றும், வலது பாரிசமாகவும் வலது நாசியிலும் வரும் சூரியநாடி 'சிவம்' என்றும், மத்தியமாக மூலாதாரத்தைத்தொட்டு பிர்மகபாலம் வரையில் இரண்டறக்கலந்ததாக நடக்கும் சுழிமுனை நாடி 'அலி' என்றும், 'அக்கினி' என்றும், 'ஜீவப்பிரமம்' என்றும் சொல்லப்படும்.

"வெள்ளிவெண்டிங்கள் விளங்கும்புதனிடம்
தெள்ளியஞாயறு செவ்வாய்சனிவலம்
வள்ளல்வியாழம் வளர்பிறைக்கோரிடம்
ஒள்ளியதேய்பிறைக் கேவலமாகுமே."

"மாறிவளர்பக்கமதிற் குறையும்பக்கம்
மதிநாடிகதிர்நாடி வளர்பொன்னேடிப்
பேறுமிகவுண்டாகும் பிராணனிற்கும்
பின்புரைத்தகாரியங்க ளெல்லாமேலாம்
கூறுகின்றசனிநாளிற் பகலிராவிற்
குலவுசரம்வலமிடத்தே கோணுதோடில்
நாறுமலர்ப்பெருந்திருவே சொன்னேமிந்த
ஞாலமெங்கும் புகழ்பெறவே நடக்குமென்றே."

ஜாமம் ஒன்றுக்கு நாழிகை ஐந்தாக, முதல் ஜாமம் காலை நாலுமணிமுதல் மாலைவரையில் மேற்சொல்லிய படியே வெள்ளி-திங்கள் - புதன்கிழமை சந்திரநாடியும், ஞாயிறு-செவ்வாய்-சனிக்கிழமை சூரியநாடியும், வளர்பிறை வியாழக்கிழமை சந்திரநாடியும், தேய்ப்பிறை வியாழக்கிழமை சூரியநாடியும், சனிக்கிழமை இராப்பகல் சூரியநாடியும் நடக்கவேண்டும். இதுவே வாரசரமாம். மேற்சொல்லியபடியே நாடிகளில் சுவாசத்தை நிறுத்தி

அப்பியாசம் செய்தால் தங்கள் இஷ்டகாரியசித்தி யாவற்றும் கரதலாகமலம்போல் நிறைவேறும்.

இந்தசரத்தை பிரதிமாதம் அமாவாசைமுதல் பிரதமை துவிதியை இந்த மூன்று நாட்களில் இரவும் பகலும் சூரியநாடியிற் செலுத்தினுல், அம்மாதம் முழுதும் நன்மைகளேயே தரும். பிரதி வருஷமும் சித்திரைமாதம் அமாவாசை பிரதமை துவிதியை மூன்றுநாளும் இரவும் பகலும் சூரியநாடியில் நடக்கச்செய்தால் அவ்வருஷம் முழுதும் நன்மைகளேயே தரும்.

யோகிகள் எப்போதும் சுவாசத்தை சூரியகலேயிலேயே நடத்திக்கொண்டிருப்பார்கள். சரம் ஓர்க்கால் காலக்கிரமம்போல் நடவர்மல் பேதித்து நடக்கும். அவ்வாறு நடப்பது சரீரதோஷ குற்றமும், சாதனம் சரிவர நடவாத குற்றமுமேயாகும்.

அவ்வாறு சூரியனில் நடக்கவேண்டிய காலத்தில் சந்திரனும், சந்திரன் நடக்கவேண்டிய காலத்தில் சூரியனும் நடக்கில், பிணி, துன்பம், சாக்காடு முதலியவைகளுக்கு காரணமாகும். ஆனதால் சூரியன் நடக்கவேண்டிய காலத்தில் சூரியனேயும் சந்திரன் நடக்கவேண்டிய காலத்தில் சந்திரனேயும் நடத்துவதற்கும், வேண்டிய போது வேண்டியகலேயை வேண்டியகலேயில் நடத்துவதற்கும் குருமூர்த்தி முகாந்திரமாகத் தெரிந்துக்கொள்ள வேண்டியது.

இத்தகைய சரபீஜம் சரிவர தொன்னூறுநாள் அப்பியாசத்தில் கொண்டுவந்த பிராணுயாமம் சரீரத்திலுள்ள சர்வவியாதிகளேயும் நீக்கி பரிசுத்தப்படுத்தும். அதற்கு

மேல் கும்பகத்தில் உடல் ஆவி மனம் மூன்றும் ஒன்று பட்டு நெக்குவிட்டுருகி ஒன்றுபடும். அப்போது உணர்ச்சியால் உள்ளொளி தோன்றும். அதுவே பிர்மா, விஷ்ணு, ருத்திரன் முதலிய பல தெய்வங்களாகக் கொண்டாடப்பட்டது. அந்நிலையை ஜோதியென்றும், ஞானமென்றும், கடவுளென்றும், மோட்சமென்றும் சொல்லப்படும். அந்நிலையை அடைந்தவரே ஜீவன்முத்தர், யோகி, ஞானி, கடவுள் என்றும் சொல்லப்படும். அவரே எல்லாம்வல்ல இறைவராவர். இவையனைத்துக்குங் காரணம் மனத்தைக் கட்டுப்படுத்தி சாதனத்தால் விருத்தியடையச்செய்தால் நாளுக்குநாள் விருத்தியாகி பூரணமடையும். அதற்குமேல் அறிவே குருவாகி எல்லாம் போதிக்கும். முடிவில் சர்வசாக்ஷி தேஜோமயமே அறிவுக்கறிவாகிய தேஜோமயமாக தனக்குள்ளே விளங்கி மௌனமந்திரத்தில் ஓதற்கரிய எல்லாமறிந்து ஆனந்தித்து வல்லாபழம் பொருளாகும். ஓம்சிவா.

ஔவையார் திருவாய்மலர்ந்தருளிய

சரயோகஞானம்

முற்றிற்று.

---

உயிர் மெய்யெழுத்து

# மூலிகை ஜாலரத்தினம்

## சக்கரத்துடன் 1 - 2 - இரண்டு பாகமும்.

இதில் ஆடும் மூலிகை அறுபத்திநாலிற்கும், வசியம்-மோகனம்-தம்பனம்-உச்சாடனம் வித்வேஷனம்-ஆக்ருஷணம் மாரணம் முதலிய அஷ்டமாசித்து மூலிகைகளின் விபரமும், அதனை உபயோகிக்கும் விதமும், அதன் பிரயோஜனமும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கி இருக்கிறது.

புத்தகம் 1-க்கு விலை அணு **8**.

# பச்சிலை மூலிகை அகராதி

உலகில் சர்வ மூலிகைகளும் நமக்கே கடவுள் உற்பத்தி செய்திருக்க, அதில் அனேகருக்குச் சில மூலிகைகள் தெரிந்தும் அனேக மூலிகைகள் தெரியாமலும் இருப்பதியற்கையே ஆனதால், குடும்ப ஸ்திரீகளுக்கும் வைத்தியர்களுக்கும், வாதிகளுக்கும் தெரிந்து உபயோகமாகும்படி தெள்ளத்தெளிய அதன்மர்மம் செய்கை வெளியிடப்பட்டிருக்கிறது.

புத்தகம் 1-க்கு விலை அணு **12**.

## 18-சித்தர்கள் திருவாய்மலர்ந்தருளிய

# வாதக்கோவை.

அனேக மனிதர்களுக்கு இரசவாதஞ் செய்வதில் விருப்பமுண்டு. அந்த விருப்பத்தின்படியே அதைச்செய்து முடித்துக்கொள்ள எவ்வளவோ திரவியங்கள் வீணே செலவாகின்றன. ஆகையால் அப்படி திரவிய நஷ்டம் வராதபடி கற்றுக்கொண்டு செய்துபார்க்க ஸ்ரீ அகஸ்திய முனிவர் முதலியோர் திருவாய்மலர்ந்த இரசவாதங்களையெல்லாம் ஒன்றாய்த்திரட்டி பொழிப்புரையெழுதி, யாவருக்கும் பயன்படும்படி அச்சிடப்பட்டிருக்கிறது.

புத்தகம் 1-க்கு விலை ரூபா **1**.

இந்து பாரம் கோபியா என்னும்

# அனுபவ வைத்திய தேவரகசியம்

மூன்று காண்டங்களும் அடங்கியது.

இந்த வைத்தியம் சுமார் 1600-பக்கங்கள் அடங்கியது. இதில் 4448-வியாதிகளும், கருவு தரிக்கும்படியான சிகிச்சைகளும், பாலரோக சிகிக்சைகளும், அஷ்டவித பரீட்சைகளும், நாடியின் நிதானங்களும், சுத்திக்கிரமங்களும், புடத்திட்டங்களும், ரத்னபரீட்சைகளும், பொன். வெள்ளி, தாம்பர முதலிய பஸ்பங்களும், காலக்கிரமங்களும், லேகியம், சூரணம். மாத்திரை, எண்ணெய், நெய் முதலிய தைலங்களும், கிரகதோஷ சிகிச்சைகளும், இன்னின்ன விதமாகச் செய்தால் நிவர்த்தி யாகுமென்றும், வைத்தியருடைய லட்சணங்களும், பச்சிலை வர்க்கங்களினுல் தீரும் வியாதிகளும், நூதனமாகிய வியாதிகளுக்குத் தகுந்த சிகிச்சைகளும் இன்னும் அனேகவித ரசாயனங்களும் இந்த அனுபவ வைத்திய தேவரகசியத்தில் அடக்கி அச்சிட்டிருக்கிறது. இதை வாங்கி உபயோகப் பட்டின வர்களுக்குத்தான் இதனுடைய அருமை தெரியவரும்.

சகோதரர்களே! மேற்சொன்ன புத்தகத்தை ஒரு முறை வாங்கி அதிலுள்ள அனுபோக முறைகளை ஒரு தடவைப் பரீக்ஷித்து உமது பந்து மித்திரர்களுக்குத் தாங்களே சிபார்சு செய்வீர்களென்று எதிர்பார்க்கப் படுகிறது.

புத்தகம் 1-க்கு விலை ரூபா **6**.

எமது விலாசம்:—

**பி. எஸ். டி. எம். அண்டு ஸன்,**

வேப்பேரி போஸ்டு மதராஸ்.